# குழந்தை இலக்கியம்

கவிஞர் வாணிதாசன்









# குழந்தை இலக்கியம்











கவிஞர் :

## வாணிதாசன்







வள்ளுவர் பண்ணை





# குழந்தை இலக்கியம்

கவிஞர்

வாணிதாசன்



**வள்ளுவர் பண்ணை**

22, இரண்டாவது முதன்மைச்சாலை

சி.ஐ.டி. நகர், சென்னை—600 035.

# நூல் விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | குழந்தை இலக்கியம் |
| ஆசிரியரின் பெயர் | : | கவிஞர் வாணிதாசன் |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | சிறுவர்களுக்கு நல்ல எண்ணங்களும் பரந்த மனப்பான்மையும் நல்ல பண்புகளும் உண்டாவதற்கு ஏற்ற பாடல்கள் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு: ஜூன் 1959<br>2ஆம் பதிப்பு : ஜூலை 1998 |
| நூலின் உரிமை | : | ஆசிரியருக்கு |
| நூலின் அளவு | : | கிரவுன் 1×8 |
| பயன்படுத்திய தாள் | : | 11.6 கிலோ வெள்ளைத்தாள் |
| பக்கங்கள் | : | x + 166 |
| அச்சுப்புள்ளிகள் | : | 12 புள்ளிகள் |
| ஒளி அச்சு | : | எல்.கே.எம். கம்ப்யூட்டர் பிரிண்ட்ஸ், சென்னை-17. |
| அச்சகத்தார் | : | செல்வ விநாயகர் ஆப்செட், சென்னை - 14. |
| நூல் கட்டு | : | சாதா அட்டை |
| விலை | : | ரூ. 30-00 |
| பதிப்பாளர் | : | வள்ளுவர் பண்ணை |

KUZHANTHAI ILAKKIYAM : KAVIGNAR VANIDHASAN : PRICE Rs.30-00

| | | |
|---|---|---|
| உட்படங்கள் | : | அமரர் சாகர் |
| அட்டைப்படம் | : | மணியம் செல்வன் |

# பதிப்புரை

*'மழலையர் அறிவு வளர மொழி வளரும்; நலம் வளரும்; நாடு வளரும்; நல்லரசு நிலவும்!' — இது கவிஞர் வாணிதாசருடைய எண்ணம்.*

*இவ்வெண்ண அடிப்படையில் அவர்கள் அவ்வப்போது சில பாடல்களை எழுதியிருந்தார்கள். அவற்றைத் திரட்டி ஒரு நூலாக வெளியிட்டால் தமிழ்க் குழந்தைகளுக்குப் பெரிதும் பயன்படும் என்று கருதினேன். என் கருத்து ஈடேற அவரும், அவர்தம் நண்பர்களாகிய திருவாளர்கள் புலவர் தில்லை தா. அழகுவேலனார், வித்துவான் புதுவை பா. முத்து, நா. அறிவழகன் ஆகியோரும் பெரிதும் உதவினார்கள். மிகுந்த பொருட் செலவையும் பாராது இதனை உருவாக்கிக் குழந்தையர் உலகுக்கு அளித்துள்ளேன். அவர்கள் பெறும் இன்பமே என் இன்பமும்!*

*இந் நூலை வெளியிட்டுக் கொள்ள இசைவளித்த கவிஞர் வாணிதாசர்க்கும், கருத்துரை நல்கிய தமிழ்க் காவலர் டாக்டர் அ. சிதம்பரநாதர் அவர்கட்கும், ஓவியங்கள் வரைந்து உதவிய சாகர், சரவணன் ஆகியோர்க்கும், இவ்விரண்டாம் பதிப்பில் மேலட்டை ஓவியம் வரைந்து தந்த மணியம் செல்வன் அவர்களுக்கும் நன்றி!*

**ந. பழநியப்பன்**
உரிமையாளர்
வள்ளுவர் பண்ணை

# என் உரை

பாட்டும் கதையும் குழந்தைகளுக்குப் பேரின்பம் ஊட்டுவன. பிஞ்சு உள்ளங்களில் இனிய எளிய முறையில் நல்லறிவைச் சேர்க்கும் முயற்சியே இக் 'குழந்தை இலக்கிய'த்தின் குறிக்கோள் ஆகும்.

இதனைத் தமிழகச் செல்வங்களுக்குப் பயன்படும் வகையில் தொகுத்துதவிய என் அருமை நண்பர்கட்கும், கண்கவர் ஓவியங்களை அமைத்தும் அழகுற அச்சிட்டும் நூல் வடிவாகக் கொண்டுவந்த வள்ளுவர் பண்ணை உரிமையாளர் திரு. ந. பழநியப்பருக்கும், கருத்துரை நல்கியுதவிய சென்னைப் பல்கலைக்கழக ஆங்கிலத் தமிழ் அகராதித் துறைத் தலைமையாசிரியர் உயர்திரு. டாக்டர் அ. சிதம்பரநாதர், எம்.ஏ., எம்.எல்.சி., அவர்கட்கும் என் நன்றி!

வாழ்க குழந்தைகள்! வாழ்க தமிழ் மொழி! வாழ்க நம் நாடே!

**சேலியமேடு**
**15-6-1959**

**வாணிதாசன்**

சென்னைப் பல்கலைக் கழக
ஆங்கிலத் தமிழ் அகராதித் துறைத் தலைமை ஆசிரியர்,
**உயர்திரு. டாக்டர். அ. சிதம்பரநாதர், எம்.ஏ.,எம்.எல்.சி.,**
அவர்கள் அளித்த

# கருத்துரை

---

கவிஞர் வாணிதாசன் தமிழுலகுக்கு இப்போது புதுவதாகப் புனைந்து அளித்துள்ள "குழந்தை இலக்கியம்" என்ற தலைப்பில் வந்துள்ள பாடல்களைப் படித்து இன்புற்றேன். சிறு குழந்தைகளுக்கேற்ற பாடல்கள் சிலவும், வயதேறிய குழந்தைகளுக்கேற்ற பாடல்கள் சிலவும் இத்தொகுப்பிற் காணப்படுகின்றன.

கவிதைக்குப் பொருள் எதுவாகவும் இருக்கலாம். இதனைப் பற்றிப் பாடுவதால் கவி சிறப்புறும், இதனைப் பற்றிப் பாடுவதால் கவி சிறப்புறாது என்று கூறுதல் பொருந்தாது. எதனைப் பற்றிப் பாடினாலும், பாடிய முறையைப்பற்றி நோக்குவதுதான் பொருத்தம். அம்முறையில் இப்பாடல் தொகுப்பினை நோக்கினால், திரு. வாணிதாசனின் கவிதைத்திறம் நன்கு விளங்கும்.

நிலவினைப்பற்றிப் பலர் பாடியுள்ளார்கள். இந்தக் கவிஞர்,

"உலகிற் கல்லார் உன்னிடத்தில்,
ஔவைக் கிழவி உண்டென்பார்;
நிலவே! அந்தக் கிழவிக்கு
நீரும் சோறும் கொடுப்பதியார்?"

எனப் பாடியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. ஆழ்ந்த கருத்தோடு இவ்வாறு பாடும் அதே நேரத்தில், குழந்தைகளுடைய நிலையிலேயே தம்மை வைத்துக் கொண்டு, கவிஞர்,

*"தம்பி, தங்கை உனக்குண்டோ?*
*சாதி, சமயம் உனக்குண்டோ?*
*வம்பு வேண்டாம், என்தம்பி*
*வாட்டம் தீர்க்க வருவாயே!"*

எனவும் பாடிவிட்டார் என்பது குறிப்பிடத்தக்கது. திங்களில் ஔவைப் பாட்டி இருக்கிறாள் என்றும், மங்கை ஒருத்தி கைராட்டினம் சுற்றுகிறாள் என்றும், மான் உண்டென்றும் பலர் பலர் கருதி வந்த கருத்துக்களின் பொருந்தாமையைப் புலப்படுத்தி, மக்களுக்குள் உள்ள சாதி சமய வேறுபாடுகள் தவிர்க்கப்பட வேண்டும் என்பதை இப்பாடற் பகுதிகளில் கவிஞர் குறிப்பாக உணர்த்தி யுள்ளமை பாராட்டத்தக்கது.

இத்தொகுப்பில் வந்துள்ள சிற்றூர் பேரூர் பற்றிய வருணனைகள் முழுதும் படித்துச் சுவைக்கத் தக்கன. சிற்றூரைச் சிற்றூராகவும் பேரூரைப் பேரூராகவும் இவர் படம் பிடித்துக் காட்டும் பெற்றியைப் போற்றுதல் வேண்டும்.

*"மாட்டை ஓட்டும் ஒருபிள்ளை!*
*மனையைக் காக்கும் ஒருபிள்ளை!*
*வீட்டிற் சமைக்கச் சுள்ளிதனை*
*வெளியில் தேடும் ஒருபிள்ளை!"*

என வரும் பாட்டைப் படித்தால், சிற்றூர்க் காட்சி வெளிப்படும் என்பது உண்மை. சிற்றூரில் அன்பும் வலிவும் அடக்கமும் வாய்மையும் உண்டு என்பதனையும், பேரூரில் வம்பும் தும்பும் வழிப்பறிக் கொள்ளையும் தெருப்புழுதியும்

நிறைய உண்டென்பதையும் கவிஞர் விளக்கி உள்ள முறையைக் கண்டுதான் துய்க்கவேண்டும், பேரூரில்,

*"உணவு விடுதி பலஉண்டே!*
*உறங்கும் விடுதி பலஉண்டே!*
*உணவுக் காக எச்சிலையை*
*ஓர்ப்பாய்ப் பொறுக்கும் உயிர்உண்டே!"*

எனக் கவிஞர் கூறியுள்ள இடத்தில், காசு உள்ளவர்கள் உணவு விடுதிகளில் உண்டு உறங்கி மகிழ்வார்களாக, எச்சிலைப் பொறுக்குதற்காக ஏமாந்து காத்து நிற்கும் மக்கள் சிலர் உள்ளார்களே என்ற இரக்கக் குறிப்புப்படக் கவிஞர் சொல்லியுள்ள விதத்தினை நினைத்து நினைத்து நான் மகிழ்கிறேன்.

சிறுவர்களுக்கு மெய்ப்பொருளாவது கல்வி என்பதும், பெரியோரைக் கண்டால் அவர்கள் 'வணக்கம்' எனச் சொல்ல வேண்டும் என்பதும், வழியில் ஓரமாய்ச் செல்ல வேண்டும் என்பதும், பள்ளிக்கு வேளைகடந்து செல்லக் கூடாது என்பதும், கற்றுத் தெளிவுபெற்று நற்பெயர் எடுக்க வேண்டும் என்பதும் எத்துணை இனிமையாகக் கவிஞரின் பாடல்களில் அமைந்துள்ளன!

தொட்ட தொட்ட இடத்தில் எல்லாம் தமிழ்மணம் நூலில் கமழக் காண்கிறேன் என்றாலும், "தாய்மொழியே தமிழ்" என்ற தலைப்பில் வரும் பாடல்களில் அத்தென்றல் வீசக் காண்கிறேன். தமிழ்மொழியினுடைய சிறப்புப் பண்புகள் எல்லாம் "தமிழ் மொழி" என்ற தலைப்பிலும், தமிழ்நாட்டின் சிறப்புக்கள் எல்லாம் "தமிழ்நாடே" என்ற தலைப்பிலும் அழகொழுக எழுதப்பட்டுள.

பள்ளிக்கூடத்திற் படிக்கும் சிறுவர்கள் வயதான பிற்பாடு பாரினை ஆள வேண்டுமென்று நினைப்பவர்கள், பாரினை ஆள வேண்டியவர்கள், கல்வி பயிலுங்கால் படிப்பில் உன்னிப்பாக இல்லாதொழிந்தால், நாளை

எவ்வாறு பாரையோ, ஊரையோதான் ஆளமுடியும் என்ற வினாவினை எழுப்புகின்ற கவிஞர், "எப்படி ஆள்வீர்?" என்ற தலைப்பிலே அமைந்துள்ள பாடல்களைப் படிக்குந் தோறும் படிக்குந்தோறும் கவிதையின்பத்தையும் கவிதை யின் பயனையும் ஒருவர் அடையாதிருத்தல் இயலாது.

எடுத்துக்காட்டுக்களாகச் சிலவற்றைச் சுட்டிக்காட்டி னேன். இக்கவிஞர் இயற்கைப்பொருள்களைப் பற்றியும், செயற்கைப் பொருள்களைப் பற்றியும், விலங்கைப் பற்றியும், பறவைகளைப் பற்றியும், மக்களைப் பற்றியும், மொழியைப் பற்றியும் எவ்வளவு சிறப்புறப் பாடியுள்ளார் என்பதை அறிய வேண்டுவோர் நூலினை வாங்கி ஓதினால் கட்டாயம் உணர்வார்கள் என்பது உறுதி.

பொருத்தமான நல்ல படங்களோடும், நல்ல கட்டிடத்தோடும், அட்டைப் படத்தோடும் கொட்டை அச்செழுத்துக்களில் கண்கவர் வனப்பமைய இதனை வெளியிட்டுள்ள 'வள்ளுவர் பண்ணை'யாரைப் பாராட்டுகிறேன்.

இவைபோன்ற நூல்கள் தமிழ்ப் பெற்றோராற் பொதுவாகவும், தமிழ்ச் சிறுவர்களாலும் ஆசிரியர்களாலும் சிறப்பாகவும் வரவேற்கப்படும் என எதிர்பார்க்கிறேன்.

**சென்னை–5**
**17–11–1959**

**அ. சிதம்பரநாதன்**

# உள்ளுறை




## 1

சாய்ந்தா டம்மா! சாய்ந்தாடு!
தங்கச் சிலையே! சாய்ந்தாடு!
காயும் நிலவே! சாய்ந்தாடு!
கண்ணே! மணியே! சாய்ந்தாடு! 1

முத்தம் தருவேன்! சாய்ந்தாடு!
முத்தே! பவளமே! சாய்ந்தாடு!
கொத்தும் கிளியே! சாய்ந்தாடு!
தோகை மயிலே! சாய்ந்தாடு! 2

பொன்னே! மணியே! சாய்ந்தாடு!
புதுமணப் பூவே! சாய்ந்தாடு!
கன்னற் சுவையே! சாய்ந்தாடு!
காலை அழகே! சாய்ந்தாடு! 3

அத்தை மகளே! சாய்ந்தாடு!
அழகின் பெருக்கே! சாய்ந்தாடு!
குத்து விளக்கே! சாய்ந்தாடு!
குளிர்ந்த காற்றே! சாய்ந்தாடு! 4

வானச் சுடரே! சாய்ந்தாடு!
வடித்த தேனே! சாய்ந்தாடு!
கானக் குயிலே! சாய்ந்தாடு!
காட்டுப் புறாவே! சாய்ந்தாடு! 5

பாலும் தருவேன்! சாய்ந்தாடு!
பழமும் தருவேன்! சாய்ந்தாடு!
மேலும் மேலும் சாய்ந்தாடு!
விலையில் மணியே! சாய்ந்தாடு! 6






## 2

அம்புலி அக்கா! வா! வா!
ஆடலாம்! பாடலாம்! வா! வா!
செம்புப் பாலைக் குடிக்கலாம்!
சேர்ந்து சேர்ந்தே ஆடலாம்! 1

பாட்டுப் பாடிக் குதிக்கலாம்!
பள்ளிக் கோடிப் படிக்கலாம்!
காட்டுப் பூவைப் பறிக்கலாம்!
கட்டி மாலை தொடுக்கலாம்! 2

வீடு கட்டிச் சமைக்கலாம்!
வெளியில் திண்ணை அமைக்கலாம்!
ஆடு, கோழி வளர்க்கலாம்!
அமியில் சாந்தை அரைக்கலாம்! 3

பொம்மை வைத்தே ஆடலாம்!
புதுப்புது நகைகள் போடலாம்!
அம்மா போல நடைநடந்தே
அங்கும் இங்கும் போகலாம்! 4




## 3

தம்பி! சோறு! வாய்திற!
தளிரே! சோறு! வாய்திற!
கொம்புத் தேனே! வாய்திற!
குளத்துப் பூவே! வாய்திற! 1

காலைச் சுடரே! வாய்திற!
கட்டித் தயிரே! வாய்திற!
சோலை அழகே! வாய்திற!
குழந்தைப் புலியே! வாய்திற! 2

தங்கக் கட்டி! வாய்திற!
தம்பி! தம்பி! வாய்திற!
சிங்கக் குட்டி! வாய்திற!
சிறுசோ றுண்ண வாய்திற! 3

கொக்குக் கேட்கும்! வாய்திற!
குருவி கேட்கும்! வாய்திற!
அக்காள் கேட்பார்! வாய்திற!
ஆயா கேட்பார்! வாய்திற! 4

அண்ணன் கேட்பார்! வாய்திற!
அம்மா கேட்பார்! வாய்திற!
கிண்ணம் கேட்கும்! வாய்திற!
கிளியே! முத்தே! வாய்திற! 5






## 4

வாடா! வாடா! கண்ணு!
வாயில் என்னடா மண்ணு?
சோறு வாங்கி உண்ணு! 1

அம்மா புடைவை பட்டு!
அழுதால் தலையிற் குட்டு!
அடுப்பில் வேகுது பிட்டு! 2

தம்பி! தம்பி! வாப்பா!
தடுக்கிற் சிரிக்குது பாப்பா!
கதவுக் கிடுவது தாழ்ப்பா! 3

வாடா! வாடா! மூக்கா!
வாங்கலாம் கடையிற் சீக்கா!
மரத்திற் கூவுது காக்கா! 4

தங்கைக்கு மூத்தவள் அக்கா!
தம்பிக்குப் போட்டாள் சொக்கா!
தலைமேற் பறக்குது வக்கா! 5




## 5

காலை வந்தது! காலை வந்தது!
கவின்மிகு விடியற் காலை வந்தது!

சாலை மரத்தில் தென்றல் தவழச்
சருகு பனியில் நனைந்து கிடக்க
மாலைப் பூக்கள் வருத்தம் காட்ட,
வானில் வெள்ளி மயங்கிக் கிடக்க— காலை

சேவல் கூவிக் காதைக் கிழிக்கச்
சிறுஒளி கீழ்வான் இருளை அழிக்கப்,
பூவிற் பனிநீர் உருண்டு கிடக்கப்,
புதரிற் சிட்டு பாடிக் களிக்க— காலை

செம்பொன் உருக்கைக் கீழ்வான் காட்டத்,
தேனுண்டு வண்டு புரண்டு கிடக்கத்
தம்பி விழித்துத் 'தாத்தா' பாடத்,
தங்கை எழுந்து கோலம் போட— காலை

கும்பல் கும்பலாய்க் காக்கை பறக்க,
குளத்தில் தாமரை குலுங்கிச் சிரிக்க,
வம்பணி மாதர் சோம்பல் முறிக்க,
மாமி முணறிக் கதவைத் திறக்க—

காலை






## 6

*அந்தி வந்ததே அந்தி!*
*செந்தீ மேல்வான் சிந்திச் சிந்தி— அந்தி*

*வெந்து தணிந்த சிற்றூர் போலும்*
*மேற்கு வான் விரிவு தோணும்!— அந்தி*

*செம்மண் மேட்டு நிலத்தைப் போலத்*
*தெரியும் வானில் செறிந்த மேகம்!*
*வெம்மை மாறிக் குளிர்ந்த காற்று*
*வீச மணமும் வந்து வீசும்!— அந்தி*

*வானில் ஓடிய செம்மைக் கோடு*
*வாள ரிந்த இரத்தக் காடு!*
*கானும் மலையும் செந்தீ மேடு!*
*கண்ட பிறையும் யானைக் கோடு!— அந்தி*

*குயில்கள் கூவும் குளிர்ந்த காவில்!*
*குடித்து வண்டு பாடும் பூவில்!*
*அயலில் உள்ள துளிர்த்த மாவில்*
*அடங்கப் புட்கள், அடங்கும் செவ்வான்! அந்தி*




## 7

நிலவே! நிலவே! வாராயோ?
நீ பகல் எங்குச் சென்றாயோ?

உலகிற் கல்லார் உன்னிடத்தில்
ஔவைக் கிழவி உண்டென்பார்;
நிலவே! அந்தக் கிழவிக்கு
நீரும் சோறும் கொடுப்பதியார்?— நிலவே!

அரிவாள் போல வான்தோன்றி
அழகாய் நாளும் வளர்கின்றாய்!
பெரிய வெள்ளித் தட்டாகிப்
பின்ஏன் குறைந்து தேய்கின்றாய்?— நிலவே!

தம்பி, தங்கை உனக்குண்டோ?
சாதி, சமயம் உனக்குண்டோ?
வம்பு வேண்டாம் என் தம்பி!
வாட்டம் தீர்க்க வருவாயே!— நிலவே!




## 8

மழையே! மழையே! வா! வா
வாழ்வின் உயிரே! வா! வா!
உழவர் உன்னை எதிர்பார்த்தே
ஒவ்வொரு நாளும் பேசுகின்றார்!— மழையே!

ஏரி குளங்கள் நிறைந்திடவும்,
எருமை மாடு களித்திடவும்,
ஊரில் உள்ள வயலெல்லாம்
பச்சைப் பட்டை உடுத்திடவும்— மழையே!

மரங்கள் செடிகள் தழைத்திடவும்.
மலர்கள் பூத்துச் சிரித்திடவும்,
தெருவிற் சிறுவர் தாளாலே
கப்பல் செய்து விட்டிடவும்— மழையே!

கும்பல் கும்பலாய்க் காக்கை பறக்க,
குளத்தில் தாமரை குலுங்கிச் சிரிக்க,
வம்பணி மாதர் சோம்பல் முறிக்க,
மாமி முணறிக் கதவைத் திறக்க— காலை






## 6

அந்தி வந்ததே அந்தி!
செந்தீ மேல்வான் சிந்திச் சிந்தி— அந்தி

வெந்து தணிந்த சிற்றூர் போலும்
மேற்கு வான் விரிவு தோணும்!— அந்தி

செம்மண் மேட்டு நிலத்தைப் போலத்
தெரியும் வானில் செறிந்த மேகம்!
வெம்மை மாறிக் குளிர்ந்த காற்று
வீச மணமும் வந்து வீசும்!— அந்தி

வானில் ஓடிய செம்மைக் கோடு
வாள ரிந்த இரத்தக் காடு!
கானும் மலையும் செந்தீ மேடு!
கண்ட பிறையும் யானைக் கோடு!— அந்தி

குயில்கள் கூவும் குளிர்ந்த காவில்!
குடித்து வண்டு பாடும் பூவில்!
அயலில் உள்ள துளிர்த்த மாவில்
அடங்கப் புட்கள், அடங்கும் செவ்வான்! அந்தி




7

நிலவே! நிலவே! வாராயோ?
நீ பகல் எங்குச் சென்றாயோ?

உலகிற் கல்லார் உன்னிடத்தில்
ஔவைக் கிழவி உண்டென்பார்;
நிலவே! அந்தக் கிழவிக்கு
நீரும் சோறும் கொடுப்பதியார்?— நிலவே!

அரிவாள் போல வான்தோன்றி
அழகாய் நாளும் வளர்கின்றாய்!
பெரிய வெள்ளித் தட்டாகிப்
பின்ஏன் குறைந்து தேய்கின்றாய்?— நிலவே!

தம்பி, தங்கை உனக்குண்டோ?
சாதி, சமயம் உனக்குண்டோ?
வம்பு வேண்டாம் என் தம்பி!
வாட்டம் தீர்க்க வருவாயே!— நிலவே!




## 8

மழையே! மழையே! வா! வா
வாழ்வின் உயிரே! வா! வா!
உழவர் உன்னை எதிர்பார்த்தே
ஒவ்வொரு நாளும் பேசுகின்றார்!— மழையே!

ஏரி குளங்கள் நிறைந்திடவும்,
எருமை மாடு களித்திடவும்,
ஊரில் உள்ள வயலெல்லாம்
பச்சைப் பட்டை உடுத்திடவும்— மழையே!

மரங்கள் செடிகள் தழைத்திடவும்
மலர்கள் பூத்துச் சிரித்திடவும்,
தெருவிற் சிறுவர் தாளாலே
கப்பல் செய்து விட்டிடவும்— மழையே!

காடு கரம்பு துளிர்த்திடவும்,
காளை மாடு கொழுத்திடவும்,
ஓடை ஆறு கல்லிடுக்கில்
ஓயா திசையை மீட்டிடவும்— மழையே!

தவளை எல்லாம் ஓயாது
தத்திக் கத்திக் களித்திடவும்,
குவளை பூக்க வண்டினங்கள்
தேனைக் குடித்துப் பாடிடவும்— மழையே!



# மழை – II

## 9

*கொம்பு சுற்றி அடித்ததே!*
*குமுறி வானம் இடித்ததே!*
*அம்பைப் போல மழையும் பெய்தே*
*அல்லிக் குளத்தை நிறைத்ததே!* 1

*மின்னல் மின்னி இடித்ததே!*
*வீட்டில் சாரல் அடித்ததே!*
*சன்னல் வழியாய் நீர்பு குந்து*
*தரையில் பாயை நனைத்ததே!* 2

*கன்னல் செந்நெல் சாய்ந்ததே!*
*காய்த்த முருங்கை மாய்ந்ததே!*
*தென்னை பனையை ஆட்டி அலுக்கித்*
*தெருவில் மழையும் ஓய்ந்ததே!* 3

*இருண்ட வானம் திறந்ததே!*
*எழுந்த கதிரும் விரிந்ததே!*
*இரண்டு கரையும் வெள்ளம் புரண்டே*
*ஏரி வந்து புகுந்ததே!* 4




## 10

கத்துங் கடலே! இரவெல்லாம்
கரையைச் சீறி மோதுவதேன்?
பித்துப் பிடித்து விட்டதோ?
பிரிவுத் துயர்மே லிட்டதோ? 1

குஞ்சு பொரித்த பாம்பைப்போல்
குமுறிப் பாய்ந்து வருகின்றாய்;
மஞ்சுக் குனக்கும் இருக்கின்ற
வாழ்க்கைத் தொடர்பின் முறையாதோ? 2

வானும் நீயும் ஒருதாயின்
வயிற்றில் உதித்த இருவர்போல்
மானும் தன்மை நிறத்தாலே;
வளர்த்தவர் யாரே, கூறாயோ? 3

பாடு பட்டுத் துய்க்காது
பதுக்கி வைக்கும் கஞ்சன்போல்
ஈடில் முத்தைப், பவழத்தை
எவருக் காகக் கொண்டுள்ளாய்? 4

எத்தனை நாட்டை நீ கண்டாய்?
எத்தனை உயிரை நீயுண்டாய்?
எத்தனை அரசைப் பார்த்தாலும்
எம்மூ வரசர் ஆவாரோ?






## 11

மலையிற் பிறந்து வரும்ஆறே!
வழியில் எதைஎதைப் பார்த்துவந்தாய்?
மலையில் இழிந்து வருகையிலே
மலையின் இடுக்கைப் பார்த்தாயோ? 1

மலையிற் பிறந்து வரும்ஆறே!
வழியில் எதைஎதைப் பார்த்துவந்தாய்?
குலைகுலை யாகப் பொற்கொன்றைக்
குளிர்மலர் கொண்டு வந்தாயோ? 2

மலையிற் பிறந்து வரும்ஆறே!
வழியில் எதைஎதைப் பார்த்துவந்தாய்?
கலையோ டாடும் பெண்மானின்
காட்டைக் கடந்து வந்தாயோ? 3

மலையிற் பிறந்து வரும்ஆறே!
வழியில் எதைஎதைப் பார்த்துவந்தாய்?
இலையும் பூவும் குளிர்காவும்
எங்கெங் குண்டு சொல்வாயோ? 4

மலையிற் பிறந்து வரும்ஆறே!
வழியில் எதைஎதைப் பார்த்துவந்தாய்?
குலைகுலை யாகச் செவ்வாழை
முக்கனி கொண்டு வந்தாயோ? 5

செந்நெல் வயலில் நுழைந்தாயோ?
திருக்குளம் புகுந்து வந்தாயோ?
கன்னற் காட்டைக் கண்டாயோ?
காலாற் கடந்து சென்றாயோ? 6

கற்கள் உருட்டி வந்தாயோ?
கழனிக் குணவைத் தந்தாயோ?
மக்கள் வாழாப் பாலையிலும்
வந்தாய்! குளிர்மை தந்தாயோ? 7

ஏழை எளியோர் எண்ணாமல்
எவர்க்கும் குளிர்மை தந்தாயே!
தாழை போர்த்த கடலோரம்
வந்தாய்! கலந்தாய்! தணிந்தாயே! 8

தடுத்த அணையைச் சினந்தாயோ?
தமிழர் போலத் தணந்தாயோ?
கொடுத்தே உதவி வாழ்வதில்தான்
குளிர்மை உண்டெனக் கண்டாயோ? 9

பொன்னை விளைக்கும் சிற்றூரும்
புகையைக் கக்கும் பேரூரும்
உன்னால் வாழ்தல் கண்டோமே!
உன்னை வாழ்த்து கின்றோமே!






## 12

காரைத் தேக்கி ஊரைக் காக்கும் ஏரி!—நெற்
களையெடுத்துப் பசியைப் போக்கும் சேரி!
ஏரையோட்டி நெல்வி ளைக்கப் போமோ?—வான்
ஏரியின்றேல் உணவைக் காணப் போமோ? 1

மாரி இல்லாப் போதும் உயிர்வாழ—மழை
தேக்கி வைக்கக் கண்டவழி ஏரி!
நீர்இறைத்தே கன்று காலி ஊட்ட—மக்கள்
தேர்ந்தெடுத்த நீள்உழைப்பே ஏரி! 2

ஏரிக்குத்தாய் ஆற்று வாய்க்கால் ஆகும்!—அந்த
ஏரி, சூழ்ந்த ஊருக்குத் தாய் ஆகும்!
சேரி மக்கள் வாழ்வூன்றும் கோல்கள்—நீரைச்
சேந்தி வயல் சென்றோடும் கால்கள்! 3

கரையில் எங்கும் நீண்டபனைச் சாலை!—அலை
காற்றடிக்கப் படபடக்கும் ஓலை!
நுரைகள் பூக்கும் மதகிடையில் வெண்ணெய்!—ஏரி
நொய்மணலோ காற்றுவாங்கும் திண்ணை! 4

புதரில் எங்கும் புட்கள் கூவும் கூச்சல்!—ஏரிப்
புல்வெளியோ எருமை கன்று மேய்ச்சல்!
மதகிடையில் வாளை வரால் கெண்டை—ஓடி
வந்து வந்து துள்ளிப் பாயும் அண்டை! 5

நாணற் காடு பூமணக்கும் ஓரம்!—வெண்
ணாரை வெய்யிற் காயும் அந்தி நேரம்
ஓணான் உச்சி மரமிருந்து வீழும்!—ஏரி
ஓரப் பூக்கள் காற்றில் தலை தாழும்! 6

கரைகள் எங்கும் ஈச்சன் பனை காடு!—அந்திக்
கலகலப்பாம் ஓலை தொங்கும் கூடு!
நரைமலர்கள் கோடிநுணாப் பூக்கள்!—காய்த்த
நறுங்களாவின் பழமோ மொய்க்கும் ஈக்கள்! 7

ஏரியில்லா ஊருக் கழகு இல்லை!—ஏரி
நீர் வறண்டு போனால் வரும் தொல்லை!
ஏரி பெய்த நீரைக் காக்கும் எல்லை!—ஏரிக்
கரை யுடைந்து போனால் உயிர் இல்லை! 8

மீன்கொடுத்து வாழ வைக்கும் ஏரி!—நீள்
விழல் கொடுத்து வாழ வைக்கும் ஏரி!
வான்கொடுக்காப் போதும் செந்நெல் தந்தே—நம்மை
வாழ வைக்கும் வாழ வைக்கும் ஏரி! 9

ஏரி பூத்த கொட்டி ஆம்பல் போலே—நித்தம்
இணைந்திருக்க வேண்டும் இமை போலே!
ஏரி காய்ந்து போனால் எட்டிப் பார்க்காக்—கெட்ட
நீர்ப்பறவை போலிருக்க வேண்டாம்! 10




## 13

பூவிற் சிறந்தது தாமரையே!
பொலிவிற் சிறந்தது தாமரையே!
வாவிக் கழகு தாமரையே!
வளரும் குளத்தில் தாமரையே! 1

ஆடாப் பம்பரம் மொட்டாகும்!
அடர்ந்த இலைகள் தட்டாகும்!
நாடாத் துறட்டு முள்தண்டாம்!
தாமரை நற்காய் கற்கண்டாம்! 2

தம்பி முகமே தாமரைப்பூ!
தங்கை முகமே தாமரைப்பூ!
தம்பிப் பையன் பெருஞ்சிரிப்பு
தாமரைப் பூவின் இதழ்விரிப்பு! 3

தாமரை பூத்துக் கண்பறிக்கும்!
தாவத் தண்டு காலறுக்கும்!
தாமரை இதழ்கள் வெண்பட்டு!
தரையில் சாகும் கதிர்பட்டு! 4

*தாமரை பிறந்தது சேறென்பார்!*
*தாமரை இலையிற் சோறுண்பார்!*
*தாமரை வாழ்வு நீரோடு*
*சார்ந்த தாகும் சீரோடு!* 5






## 14

தோப்புக் கிடையில் சிறுகுடிசை!
தொடர்ந்து தொடர்ந்து பலகுடிசை!
காப்புக் கதவு கிடையாது!
காற்று வாங்கும் பலகுடிசை! 1

வீட்டின் முன்னர்ச் சிறுவேலி!
வேலிக் கிடையில் மண்பானை!
ஆட்டுக் கல்லில் வெறும்பானை!
அடுப்பின் மீதோ பெண்பூனை! 2

வாயிற் படியில் முருங்கைப்பூ
பாயைப் போட்டாற் போலிருக்கும்!
தாயைக் காணாச் சிறுகுழந்தை
தடவி எடுக்கும் வெறுமொந்தை! 3

எங்கோ இரண்டு கல்வீடும்
இருக்கும்! அவையும் பழம்வீடே!
தங்கும் திண்ணை மீதெல்லாம்
காய்ந்த வராட்டி பழஞ்சாலாம்! 4

பனையைச் சப்பும் ஒருபிள்ளை!
விரலைச் சப்பும் ஒருபிள்ளை!
தினையைக் கோதும் ஒருபிள்ளை!
கிள்ளிச் சிணுங்கும் ஒருபிள்ளை! 5

மாட்டை ஓட்டும் ஒருபிள்ளை!
மனையைக் காக்கும் ஒருபிள்ளை!
வீட்டிற் சமைக்கச் சுள்ளிதனை
வெளியில் தேடும் ஒருபிள்ளை! 6

வெய்யில் மழையில் வயல்வேலை!
வேண்டா மென்றால் உணவில்லை!
கையில் மிச்சக் காசில்லை!
காலம் முழுதும் இத்தொல்லை! 7

வேலிக் கறிகாய் பால்தயிரே
வெளியில் விற்றால் அரைவயிறே!
கூலிக் குழைத்தால் மாலையிலே
கூழும் வேகும் சாலையிலே! 8

அன்பும் வலிவும் சிற்றூரில்!
அடக்கம் வாய்மை சிற்றூரில்!
வம்பும் தும்பும் பேரூரில்!
வழிப்பறி கொள்ளை பேரூரில்! 9

உழைத்துத் தேய்ந்து பேருரை
உயர்த்தி வாழ்வோர் சிற்றூரார்!
கொழுத்த சோம்பர் சிற்றூரைக்
'குப்பைக் காடெ'னக் கூறுவரே! 10




## 15

விண்ணை இடிக்கும் மேல்மாடி!
வெளியில் இருக்கும் ஆளோடி!
கண்ணைக் கவரும் முன்வாயில்!
கதவுக ளெல்லாம் பொன்சாயல்!
திண்ணை எல்லாம் தெருப்புழுதி!
செம்மண் கூட்டி இடையெழுதி
வண்ணஞ் செய்த பெருவீடு!
வாயிற் படியோ புலிக்கூடு! 1

தன்னில் ஓடிப் பகலிரவில்
சளைக்கா தோடும் பெருங்குரலில்!
செந்நெல் விளையும் நிலமில்லை!
தீம்பழம் விளையும் தோப்பில்லை!
பொன்னை விளைக்கும் பெருங்கடைகள்!
போக்கு வரத்தோ பெருந்தடைகள்!
மன்னி நிலைத்தே என்றென்றும்
மடியைப் பறிக்கும் அன்றன்றும்! 2

உருளை சேமை புளிமூட்டை
உடன்கொண் டேகும் கைவண்டி!
வருவோர் போவோர் யாவரையும்
வயிற்றில் நிரைக்கும் நகர்வண்டி!
இருளைப் போக்கும் தெருவிளக்கோ
எழுந்த நிலவின் பெருங்கூட்டம்!
தெருவில் என்றும் நடமாட்டம்!
வேண்டும் முன்பின் கண்ணோட்டம்!

3

ஊரின் நடுவில் புகைவண்டி
ஓடும் பற்பல திசைமுண்டி!
ஏரி குட்டை குளமில்லை!
எங்கும் குழாயில் நீருண்டு!
வாரிக் கூட்டும் தொழிலாளி!
வருவார் போவார் நோயுண்டு!
சேரி மக்கள் தெருவோரம்
செய்வார் மனையறம் பலநேரம்!

4

கலைகள் வளர்க்கும் பெருமன்றம்!
கருத்தை அளிக்கும் தமிழ்மன்றம்!
உலையை வளர்த்துத் தொழில்பெருக்கும்
ஆலை உண்டு; பொருள்பெருக்கும்!
சிலையைத் தாங்கிப் பொதுமன்றம்
சிரிக்கும் எவரையும் வரவேற்கும்!
தலையைத் திருத்தும் தொழிலாளி
அறையில் இசைக்கும் வானொலியே!

5

உணவு விடுதி பலஉண்டே!
உறங்கும் விடுதி பலஉண்டே!
உணவுக் காக எச்சிலையை
ஓர்ப்பாய் பொறுக்கும் உயிர்உண்டே!
மணமில் மலரும் மணமலரும்
மகளிர் கூந்தல் வான்வில்லாம்!
பணத்தைப் பறிக்கும் பகட்டெல்லாம்
பட்டணம் பார்க்கலாம் நாளெல்லாம்! 6

கூவும் குயில்கள் அங்கில்லை!
குளிர்செடி புதர்கள் அங்கில்லை!
பூவும் புத்தம் பூவில்லை!
பொலிவும் இயற்கைப் பொலிவில்லை!
தாவிப் பாயும் முயலில்லை!
சாரல் தவழும் காற்றில்லை!
ஆவி போக்க அங்கிங்கும்
ஆயிரம் உண்டே எங்கெங்கும்! 7

அறிவைப் பெருக்கக் கல்லூரி,
ஆடல் பாடல் கல்லூரி.
பொறியியல் உணர்த்தும் கல்லூரி,
பொருளியல் உணர்த்தும் கல்லூரி,
வெறியைப் போக்கும் கல்லூரி,
விளைவைப் போக்கும் கல்லூரி,
நெறியை உணர்த்தும் கல்லூரி,
நிறைய உண்டே! நெறியுண்டோ? 8

கடற்கரை யோரச் சுழல்விளக்குக்
கண்ணைக் கவரும் பால்விளக்கு!
நடக்கும் பாதைத் திருப்பத்தில்,
நான்கு சந்தின் சதுக்கத்தில்,
படுக்கும் அறையில், முன்வீட்டில்
பட்டப் பகலாம் மின்விளக்கு!
வெடுக்கென் றணைந்தால், அந்தந்தோ!
பட்டின வாசம் வேடிக்கை! 9

தாளால் மிதிக்கும் மிதிவண்டி,
தடபுட இசைக்கும் மின்வண்டி
நாளும் ஓடும்! நிற்காது!
நல்ல காதும் கேட்காது!
மூளும் இரைச்சல் அடங்காது!
மூடிய விழியும் உறங்காது!
ஆளை ஏற்றி ஆள்இழுக்கும்
அதிசயம் பார்க்கலாம் பேரூரில்! 10






16

அறையில் இருக்குது கண்ணாடி!
அப்பா அம்மா பின்னோடி
மறைந்து நின்றால் கண்ணாடி
வந்ததை விளக்கும் கண்ணாடி! 1

தலையைச் சீவச் சீவும்!
தம்பி தாவத் தாவும்!
மலைத்து நின்று பார்த்தால்
மலைத்து நின்று பார்க்கும்! 2

சாந்தெ டுத்தால் எடுக்கும்!
தலைமு டித்தால் முடிக்கும்!
மாந்த ளிரைப் போன்ற
வாய்தி றந்தால் திறக்கும்! 3

வீட்டுக் கழகு கண்ணாடி!
விலைக்கு வாங்கிய கண்ணாடி!
காட்டக் காட்டும் கண்ணாடி!
தானே காட்டாக் கண்ணாடி! 4




## 17

ஓடாக் குதிரை ஒருகுதிரை!—வீட்டின்
உள்ளே இருக்குது மரக்குதிரை!
காடும் மேடும் ஓடாது!—வாயில்
கடிவாளம் காட்டத் தாவாது! 1

குனிந்த தலையை நிமிர்த்தாது!—வட்டக்
குளம்புக் காலைத் தாழ்த்தாது!
புனைந்த சேணம் மாற்றாது!—மண்ணில்
புரண்டு சோம்பல் ஆற்றாது! 2

புல்லும் கொள்ளும் கேட்காது!—கழுத்துப்
பூட்டுக் கயிறும் கேட்காது!
அல்லும் பகலும் கனைக்காது!—தம்பி
ஆட்ட ஆடும்! சளைக்காது! 3




## 18

மண்ணால் ஆன விளக்கு
மாடத்(து) அகல் விளக்கு!
எண்ணெய் வார்த்தால் எரியும்!
இல்லை யேல்திரி கரியும்! 1

காலை படுத்துத் தூங்கிக்
கண்வி ழிக்கும் மாலை!
மாலை இருந்து காலை
வரையும் எரியும் வேலை! 2

தங்கை தூங்கும் போதும்,
தம்பி தூங்கும் போதும்
மங்கி எரிந்து விழிக்கும்!
வந்த இருளை ஒழிக்கும்! 3




## 19

தொட்டில்! தொட்டில்! தொட்டில்!
தொங்கி ஆடும் தொட்டில்!
பட்டுக் குழந்தை தூங்கப்
பாட்டி வாங்கிய தொட்டில்! 1

பொம்மைக் குழந்தை தூங்கப்
பொம்மை சிரிக்கும் தொட்டில்!
அம்மா ஆட்டும் தொட்டில்!
அழகுத் தொட்டில்! தொட்டில்! 2

அக்கா வளர்ந்த தொட்டில்!
அண்ணன் வளர்ந்த தொட்டில்!
செக்கச் சிவந்த தம்பி
சிணுங்கச் சிரிக்கும் தொட்டில்! 3

வளர்த்து மங்கிய தொட்டில்!
வளரா திருக்கும் தொட்டில்!
தளர்ந்த முதியோர் இளைஞர்
உளத்தை ஈர்க்கும் தொட்டில்! 4

கன்னிப் பெண்கள் நெஞ்சில்
களிப்பை ஊட்டும் தொட்டில்!
சின்னப் பிள்ளை தூங்க
அன்னை ஆட்டும் தொட்டில்! 5

அம்மா ஆட்டும் தொட்டில்!
அழுது சிரித்த தொட்டில்
இம்மா நிலத்துச் சொத்தாம்!
இளமைச் சிரிப்பின் முத்தாம்! 6

பாட்டி ஆட்டும் தொட்டில்!
பாட்டன் ஆட்டும் தொட்டில்!
வீட்டிற் பிறந்த முன்னோர்
விரும்பி ஆட்டும் தொட்டில்! 7

வாழ வைத்த தொட்டில்!
வளர வைத்த தொட்டில்!
பாழ டைந்த போதும்
பாலர்க் குதவும் தொட்டில்! 8

குழந்தைக் கேற்ற அன்பைக்
கொடுக்கும் கிழவி தொட்டில்!
பழகும் தாயைப் போலப்
பற்றைக் காட்டும் தொட்டில்! 9

பிள்ளை இன்பம் ஒன்றே
பெரிதாய் எண்ணும் தொட்டில்!
உள்ளம் நொந்த பிள்ளைக்(கு)
உறக்கம் ஊட்டும் தொட்டில்! 10

பெண்ணின் பெருமை காட்டிப்
பிரியா அன்பை ஊட்டி
மண்ணில் தாய்மை உணர்த்தும்
தொட்டில் வாழ்க தொட்டில்! 11





## 20

*உருவைத் தாளில் தீட்டும்;*
*உளத்தைத் தாளிற் காட்டும்;*
*அருமை யான பேச்சின்*
*ஆழம் அழகைக் காட்டும்!* 1

*பகையைச் சாய்க்கும் கூர்வாள்;*
*பலரை ஈர்க்கும் காந்தம்;*
*நகையை மூட்டும் குழவி;*
*நலிவைப் போக்கும் தென்றல்!* 2

*உலகை மாற்றும் மருந்து;*
*உணர்வை மாற்றும் விருந்து;*
*கலக மூட்டும் மருந்து;*
*கவலை போக்கும் மருந்து!* 3

*அறிவைச் சொல்லும் தந்தை;*
*அன்பைக் காட்டும் தாயார்;*
*வெறியை ஊட்டும் காதல்;*
*வீர மூட்டும் தாறு!* 4

விளக்கிக் காட்டும் கணக்கன்;
மேன்மை சொல்லும் தோழன்;
தளர்வில் ஊக்கும் நமது
சங்க காலப் பாட்டே! 5






## 21

வில்லைப் போல இருக்கின்றாய்!
வெளியில் நீரை இறைக்கின்றாய்!
கொல்லை மேடும் கோடையிலே
குளிர்மை அடையும் உன்னாலே! 1

ஏரி சுண்டிய காலத்தும்,
இடிமழை குன்றிய காலத்தும்
நீரால் வாழும் உழவர்க்கு
நிமிர்ந்து குனிந்து கொடுக்கின்றாய்! 2

உயர்ந்தோர் தாழ்ந்தோர் எண்ணாமல்
உன்னை மிதிப்போர் எண்ணாமல்
முயன்றோர்க் கெல்லாம் தண்ணீரை
மொண்டு மொண்டு கொடுக்கின்றாய்! 3

'ஏற்றம்' என்று பெயரிட்டார்
ஏற்றம் அடைந்தோர் உன்னாலே!
ஏற்றம் மக்கள் அடையவெனில்
உழவர் இன்னல் களைவோமே! 4




## 22

பழக்கூடை இந்தா!—தமிழ்ப்
பழக்கூடை இந்தா!

அழுகாமல் உனைக்காக்கும் தற்காப்புக் கூழை!
அமிழ்து சுவைப்பலா மாங்கனி வாழை!
செழுந்தமிழ் கைவிட்டால் உனைச்சூழும் பீழை!
சிந்தித்துப் பாரடி வாழ்விக்கும் பொற்பேழை!

காவிப்பொன் பற்கள் நினைவூட்டும் மாதுளை!
கைக்குழந் தைமொழி யூட்டும் பலாச்சுளை!
ஆவி செழுந்தமிழ் ஆமோ மலைவாழை!
மாவை அணில்கோத ஆனோமே நாம்ஏழை!

வற்றாத கூடை மலர்பூத்த ஓடை!
மாத்தமிழ் தென்றல் தவழ்சோலை மேடை!
உற்று நினைத்துப்பார் உன்றன் தமிழ்வாழ்வே!
உன்வாழ்வு, உன்னினப் பெருவாழ்வு ஆகும்மே!



# எங்கள் வீடு

## 23

எங்கள் வீடு கல்வீடே!
என்னை வளர்த்த நல்வீடே!
தெங்கும் மாவும் தோட்டத்தில்!
சிறிய ஊஞ்சல் கூடத்தில்!

வீட்டின் முன்னே சிறுபந்தல்!
வேய்ந்த கீற்றோ வெறுங்கந்தல்!
வீட்டின் முன்னர் இருதிண்ணை!
மேயும் கோழிக் கதுபண்ணை!

ஆட்டுக் குட்டி ஒருகாலில்!
ஆவின் குட்டி ஒருகாலில்!
மாட்டிக் கட்டிய தாழ்வாரம்
மழைவந் தாலோ ஓரோரம்!

அண்ணன் தம்பி படிப்பதற்கும்,
அக்காள் பின்னி முடிப்பதற்கும்,
திண்ணை ஓரம் நடையொன்று
திகழும் சன்னல் ஒளிகொண்டு! 4

கூடம் நிறையப் படமிருக்கும்!
பித்தளைக் குத்து விளக்கிருக்கும்!
மாடம் நிறையக் கடையிருந்து
வாங்கிய முல்லைச் சரமிருக்கும்! 5






## 24

யானை வந்தது பின்னே!—மணி
ஓசை வந்தது முன்னே!

முறத்தைப் போலக் காதை ஆட்டி,
முன்னும் பின்னும் கையை நீட்டி
அறுத்த துண்டு பனைக்கால் தூக்கி,
அசைந்த சைந்தே நடையைக் காட்டி— யானை

நீண்ட கொம்பு வாழைத் தண்டு!
நெற்றி மேடு பொரியற் சட்டி!
நீண்ட பையைப் போன்ற கையை
நிமிர்த்தித் தூக்கி முன்சு ருட்டி— யானை

அடுத்த டுத்துக் கையைத் தூக்கி,
ஆளும் பாகன் பேச்சை நோக்கி,
கொடுத்த காசைக் கையில் வாங்கி,
கொடுத்த சைந்து நடந்து காட்டி— யானை

தட்டில் அரிசி எடுத்துத் தின்று,
தந்த தேங்காய் மிதித்துத் தின்று,
முட்டி இட்டுப் படுத்துக் குழந்தை
முதுகில் ஏற, ஏற்றிக் கொண்டு— யானை






## 25

குட்டி போட்டது பூனை!
உடைந்தது சட்டி பானை!
எட்டி எழுந்தால் நீரும்
இல்லை இலையிற் சோறும்! 1

தட்டில் வாயை வைக்கும்!
தடியை எடுத்தால் சீறும்!
கட்டி வெண்ணெய் மோரும்
கண்டால் வந்து சேரும்! 2

'மீ! மீ!' என்றே நக்கும்!
விரலை வாயால் சப்பும்!
'சீச்சீ' என்றால் சீறித்
திண்ணை வந்து சுற்றும்! 3

பாலைக் கண்டாற் கூவும்!
படுக்கப் பக்கம் மேவும்!
காலைக் கண்டால் வந்தே
காலு ராய்ந்து சுற்றும்! 4

உடலை ஒடுக்கிக் குந்தி,
ஒற்றன் போலத் தூங்கிப்
படரும் இருட்டில் தாவும்!
வெருண்ட எலிகள் கூவும்! 5

கண்கள் இரண்டும் வேலாம்!
கால்கள் நான்கும் வாளாம்!
உண்ணும் எலிமேற் பாய்ந்தே
கௌவி ஓடும் விரைந்தே! 6

எங்கோ சுவரில் உறங்கும்!
பார்ப்பார் எவர்க்கும் இரக்கம்!
மங்கிய இராஎலி வேட்டை!
மாற்றார் அகழிக் கோட்டை! 7

துடுக்குப் பூனைக் கொட்டம்
எலியின் தொல்லை மட்டம்!
அடுக்குப் பானை உருட்டும்!
அங்கும் எலியை வெருட்டும்! 8

கண்ணைச் சிறிது மூடிக்
காதை மெல்லத் தூக்கி
வண்ணப் பகலில் எல்லாம்
வால்ம டக்கித் தூங்கும்! 9

பூனை இல்லா இல்லம்
எலியின் புரட்சி வெள்ளம்!
பூனை செய்வது கொட்டம்!
பொறுத்தால் என்ன நட்டம்? 10




## 26

மாட்டை அடிக்காதே!—பசு
மாட்டை அடிக்காதே!

வீட்டின் செல்வம் மாடு!—நெல்
விளைவின் செல்வம் மாடு!
ஊட்டக் கொடுப்பது மாடு!—பால்
உண்ணக் கொடுப்பது மாடு!

பசுவின் கன்று முட்டும்!—பால்
மடிசு ரந்து கொட்டும்!
பசுவின் கன்று துள்ளும்!—மனம்
பார்க்க ஆசை கொள்ளும்!

பசுவின் கன்று காளை!—கட்டை
வண்டி இழுக்கும் நாளை!
பசுவைப் பேணி வளர்த்தால்—காசு
பணத்தை வாங்கலாம் முறத்தால்!




## 27

எருமை கருமை மாடே!
என்றும் பொறுமை மாடே!
அருமை மிக்க மாடே!
அரக்கி நடக்கும் மாடே!

சேற்றில் புரளும் எருமை!
சிறுகுட்டை புரளும் எருமை!
ஆற்றின் ஓரம் மேய்ந்தே
அசையும் போடும் எருமை!

கொம்பு வேலுக் கம்பு!
குட்டை வாலும் சம்பு!
தம்பி கண்ணி ரண்டும்
தண்ட வாளக் குண்டு!

பூத்த குளத்தை அழிக்கும்!
வயலில் புகுந்து மிதிக்கும்!
வாய்த்த கயிற்றை அறுக்கும்!
வாழைச் செடியை முறிக்கும்!

காலை மாலை கறக்கும்!
பாலைச் செம்பில் நிறைக்கும்!
ஆலைச் சத்தம் போலக்
கத்தும் கன்றை முறைக்கும்! 5

கள்ளிச் சாற்றைப் போலக்
கறக்கும் எருமைப் பாலைச்
சுள்ளி எரித்துக் காய்ச்சித்
துளிமோர் விட்டால் போச்சு! 6

எருமைத் தயிரோ கட்டி!
எடுக்கும் வெண்ணெய் கெட்டி!
உருகும் நெய்யைக் கொட்டி
உண்ண வயதும் கெட்டி! 7

கொம்பை ஆட்டித் தட்டும்!
ஒன்றோ டொன்று முட்டும்!
வம்புக் குப்போ காது!
வந்த தைவி டாது! 8

தொட்டி நீரில் மூழ்கித்
துறுத்துத் துறுத்துக் குடிக்கும்!
கட்டிப் பிண்ணாக் கோடு
கலந்த தவிடும் குடிக்கும் 9

*காய்ந்த வைக்கோல் தின்னும்!*
*கழனிப் புல்லும் தின்னும்!*
*காய்ந்த சோளத் தட்டும்*
*கம்பந் தட்டும் தின்னும்!*






## 28

காலைத் தூக்கி வாலை உயர்த்திக்
கன்றுக் குட்டி துள்ளி ஓடும்;
பாலைக் குடிக்கும்; மடியை முட்டும்;
பாய்ந்து துள்ளி ஆடிக் களிக்கும்! 1

தெருவில் ஓடிப் 'பாரி' அடிக்கும்,
சிறுவர் மடக்கத் தாண்டிக் குதிக்கும்;
அறுகம் புல்லை முனையிற் கடிக்கும்;
'அம்மா' என்று கத்தி அழைக்கும்! 2

கட்டிப் போட்டால் கதறிக் கிடக்கும்;
கட்டை அவிழ்த்தால் முட்டிக் குதிக்கும்;
கொட்டில், தோட்டம் சுற்றித் திரியும்;
குடிநீர்ப் பானை உருட்டிக் கவிழ்க்கும்! 3

கன்றைப் போல ஓடி ஆடிக்
கருத்தாய்ப் படிக்க வேண்டும் பாப்பா!
என்றும் இதுவே பெண்ணின் அடிமை
இன்னல் தவிர்க்கும் நல்வழி ஆமே!






## 29

ஆடு! வெள்ளாடு!—பல
ஆடு நுழைந்தால் அழிந்து போகும் காடு!
ஆடு! செம்மறி ஆடு!—பல
ஆடு நுழைந்தால் அழிந்து போகும் காடு! 1

ஓடி ஓடி மேயும்!—முன்கால்
உயர்த்தித் தூக்கிக் குதித்து வந்தே பாயும்!
காடு மலையும் தாவும்!—ஓநாய்
கண்டாற் போதும்; காதவழியும் கத்தும்! 2

குட்டி போடும் ஆடு!—பெண்
குட்டி வளர்ந்தால் நிறைந்து போகும் வீடு!
தட்டிக் கட்டி வளர்ப்பார்!—அந்தப்
பட்டிக்குக் காவல் நெட்டை நாயும் வளர்ப்பார்! 3

ஆட்டை மேய்ப்போர் இடையர்!—இடை
அறிந்து பாலைக் கறந்துபயன் அடைவார்!
கூட்ட ஆடு மந்தை!—விலை
கூறி ஓட்டி விற்றுவருவார் சந்தை! 4






## 30

தென்னை ஊஞ்சல் ஆடும்
சின்னக் கிளியே, இந்தா! 1

உன்னைப் போல நானும்
ஓடி ஆடி வாழ
என்ன செய்ய வேண்டும்?
எனக்குச் சொல்லு வாயே! 2

கோவைப் பழத்தின் சிவப்போ,
குமரி இதழின் சிவப்போ
மேவி விட்ட துன்றன்
மூக்கில்? உண்மை விள்ளே! 3

வான வில்லைப் போன்ற
வண்ண மாலை கழுத்தில்
ஏன்அ ணிந்தாய்? பெண்கள்
ஏங்கு தற்குத் தானோ? 4

தலை ஆட்டிக், காலால்
தாளம் போடு கின்றாய்!
கலைவி ளக்கம் உண்டோ?
கதையும் சொல்லு வாயோ? 5



# கிளி - II

## 31

*மூக்குச் சிவந்த பைங்கிளியே!*
*முக்கனி தாரேன்! வா! வா! வா!*
*பாக்கு வெற்றிலை மென்றாயோ?*
*பழந்தின் றலகு சிவந்தாயோ?* 1

*தென்னை மரந்தான் உன்வீடோ?*
*வீட்டுச் சிறுதொளை உன்வீடோ?*
*புன்னைக் காய்தான் உன்தலையோ?*
*பூக்காப் பருத்திக் காய்தலையோ?* 2

*வாழை மட்டை உன்ஊஞ்சல்!*
*வாய்திறந் தால்ஏன் பெண்ஏசல்?*
*கூழையில் தென்னைப் பொந்திருந்தோ*
*குடிசெய் வதுதான் பெருவிருந்தோ?* 3

*'அக்கா! அக்கா!' என்றுன்னை*
*அடிக்கடி பேச யார்சொன்னார்?*
*செக்கச் சிவந்த மூக்குத்தான்*
*செடியிற் பழுத்த மிளகாயோ?* 4

ஒருகால் தூக்கி மன்றாடும்
ஒண்டொடி போல நடக்கின்றாய்!
அருகில் இருக்குது கறும்பூனை!
அதன்மேல் நினைவும் இருக்கட்டும்! 5

பாலும் பழமும் இருந்தாலும்,
பாவை மடிமேல் தவழ்ந்தாலும்
நாலு பக்கம் அடைப்பிருக்கும்
நங்கைக் கூண்டும் வீடாமோ? 6

வான வெளிதான் உன் அரசு!
மாமரக் காடே உன்வீடு!
ஏனல் கொல்லை உன்சொந்தம்!
இருப்பும் வெறுப்பும் யாரறிவார்? 7

பழுக்காப் பழமும் நீபார்த்தால்
பழுத்துப் போகும் அலகிட்டால்!
கொழுத்த மாவிலை உன்வாலாம்!
கீரை வேரே உன்காலாம்! 8

மக்கள் போல நீபேசி
'வா!வா!', 'போ!போ!' என்றாலும்,
செக்கச் சிவந்த கோவையினும்
தீம்பால் பழமும் சிறப்பாமோ? 9

*தென்றல் ஆடிச் செவ்வாழைச்*
*செங்கனி கோதும் நல்வாழ்வை*
*என்றும் எவரும் கொடுப்பாரோ?*
*தடுப்பார் விடுதலை அளிப்பாரோ?*






## 32

வெடித்த இலவங் காய்போலும்,
விளைந்த தாழைப் பூப்போலும்,
ஒடித்த வாழைப் பூப்போலும்
ஒக்க இருக்கும் புறாவெல்லாம்! 1

குன்றி மணியே இருகண்கள்!
கூர்வாய் காரைப் பெருமுட்கள்!
கன்றிய கோரைக் கிழங்கைப்போல்
காலின் விரல்கள்! விழிவிருந்தே! 2

அம்பைப் போல வான்கிளம்பி
அடிக்கடி பறக்கும் புறாக்கூட்டம்!
கம்பங் கொல்லை நெல்வயலைக்
கண்டால் இறங்கும் புறாக்கூட்டம்! 3

ஆடும் பாடும் ஒன்றிரண்டும்!
ஆடல் சுவைக்கும் பின்நின்றும்!
ஓடும் ஒன்று வால் தூக்கி!
தொடரும் ஒன்று தலைதூக்கி! 4

குட்டை குளத்தில் ஆணினங்கள்
குதித்துக் குளித்தே ஆடுதல்போல்
சட்டி நீரில் புறாக்கூட்டம்
குளித்துத் தலையுடல் நீராட்டும்! 5

கூண்டைத் தாவும் ஒருபெட்டை!
'குடுகுடு'ப் பாடும் ஒருவட்டை!
கூண்டுக் கூரை மேல்நின்று
கூவத் தாவும் மற்றொன்று! 6

கூண்டைக் கட்டும் பெண்புறவு!
கூட உதவும் ஆண்புறவு!
கூண்டைக் கட்டி முடித்தவுடன்
கோலிக் குண்டே இருமுட்டை! 7

முட்டை காக்கும் தாய்ப்புறவு!
முறைமுறை மாற்றும் ஆண்புறவு!
முட்டை அளித்த சிறுகுஞ்சு
நனைந்த உருண்டை வெண்பஞ்சு! 8

உண்ட உணவைக் குஞ்சுக்குக்
கொண்டுவந் தூட்டும் நெஞ்சுக்குள்!
உண்ட பின்னும் புறாக்குஞ்சும்
ஒளிவாய் திறந்து தாய்க்கொஞ்சும்! 9

புறாவின் ஆட்டம் விழிவிருந்து!
புறாவின் பாட்டோ செவிவிருந்து!
புறாவின் நடையோ மனவிருந்து!
புறாவின் அன்போ புலன்விருந்தே!






## 33

'குக்குக்' கென்றே கூவுகின்றாய்!
குயிலே! எங்கே இசைகற்றாய்?
பக்க மேளம் இலையெனினும்
உன்றன் பாட்டுக் கீடுண்டோ? 1

காக்கைக் கூண்டிற் பிறந்தாயே!
காக்கை விட்டேன் பிரிந்தாயே?
சாக்குப் போக்குச் சொல்லாதே!
உண்மை சொல்லத் தயங்காதே! 2

கொஞ்சிப் பழமாம் உன்கண்கள்!
குறுங்கால் கோரைக் கிழங்குகளாம்!
நெஞ்சை அள்ளும் உன்குரலின்
நேர்மை, எங்கள் தமிழ்நேர்மை! 3

புள்ளிக் குயிலே! புதரெல்லாம்
துள்ளிக் குதித்துப் பாடுவையோ?
உள்ளே குரலை அடக்கிக்கொள்!
உன்னைத் தேடுது துப்பாக்கி! 4






## 34

கூரை ஏறி வீரன் போலக்
கொண்டைச் சேவல் கூவுது!—தீக்
கொண்டைச் சேவல் கூவுது!
ஊரை எழுப்பி விட்டுப் பின்னும்
யாரை எழுப்பக் கூவுது!—இன்னும்
யாரை எழுப்பக் கூவுது? 1

கூரை மீது நடைந டந்து
குனிந்து நிமிர்ந்து பார்க்குது!—செங்
கொண்டை குலுக்கி ஆர்க்குது!
போருக் கேகும் மறவன் போல
யாருக் காக நடக்குது?—சேவல்
யாருக் காக நடக்குது? 2

குப்பை சீய்த்துப் புழுவை உண்டு
குரல்கொ டுத்துக் கூவுது!—வெண்கலக்
குரல்கொ டுத்துக் கூவுது!
எப்பக் கத்திற் சிப்பாய் வந்தான்?
ஏனோ இப்படிக் கூவுது?—பின்
ஏனோ இப்படிக் கூவுது? 3

பெட்டை யோடு நடைந டந்து
வட்டச் சேவல் கூவுது!—புள்ளி
நெட்டைச் சேவல் கூவுது!
தட்டிக் கேட்க இல்லை என்றா
தலையை ஆட்டிக் கூவுது?—கொண்டைத்
தலையை ஆட்டிக் கூவுது? 4

சிறகைத் தட்டித் தலைநி மிர்த்தித்
தீரன் போலக் கூவுது!—தமிழ்
வீரன் போலக் கூவுது!
உறவை மாய்த்த பகையும் யாதோ?
ஊரும் கிழியக் கூவுது?—சிற்
றூரும் கிழியக் கூவுது? 5

துள்ளிப் பாய்ந்து சிறகைத் தட்டிக்
குள்ளச் சேவல் கூவுது!—பாதர்
வெள்ளைச் சேவல் கூவுது!
வெள்ளை எதிர்த்த வெள்ளை யன்போல்
வேற்றான் கண்டா கூவுது?—தமிழ்
மாற்றான் கண்டா கூவுது? 6






## 35

*ஒன்றிரு மயிர்மு ளைத்த*
*சிறகினை உதறித் துள்ளிச்*
*சென்றிடும் தாயி னோடு;*
*சிறுகாலாற் குப்பை சீய்க்கும்;*
*பன்முறை கழுத்தைச் சாய்த்துப்*
*பார்த்திடும் உழுந்துக் கண்ணால்;*
*கொன்றிடும் எறும்பைக் கண்டால்*
*தென்னம்பூ மூக்காற் கொத்தி!* 1

*குடித்திடும் தேங்கி நிற்கும்*
*குட்டைநீர் தாயைப் போலே!*
*முடிவேந்தர் யானை யேறி*
*மூதூரைச் சுற்றல் போலத்*
*துடுதுடுப் பான குஞ்சு*
*பெட்டையின் தோள்மே லேறி*
*நடுத்தோட்டம், வேலி, குப்பை*
*நல்லுலா வாரா நிற்கும்!* 2

தாயினைச் சூழ்ந்து மேயும்;
தன்னுடல் வண்ணப் பஞ்சை
ஓயாமற் கோதும்; தாயின்
குரல்கேட்க அருகில் ஓடும்!
நாய்வர உடல்சி லிர்த்துச்
சீறிடும் நற்றாய்க் கோழி!
தாயன்பிற் காரே ஈடு
சாற்றிட வல்லார்? சொல்லீர்! 3

உணர்ச்சியில், அறிவில் இந்த
உலகத்தில் வாழும் ஒவ்வோர்
அணுக்களும் ஒன்றே யாகும்;
அறிந்தவர் அறிவார்! ஆனால்,
பணக்காரன் – ஏழை என்று
வேறாகப் பார்க்கும் மக்கள்
எண்ணத்திற் குஞ்சு – கோழி
இயல்புகள் தோன்றி டாதே! 4






## 36

வாய்க்கால் நீரில் தலையைவிட்டு
வாத்து நத்தை மேயும்!
வயல்புகுந்து நெல்லை மேய
அறுத்த தாளும் சாயும்! 1

வாய்க்கால் வளையில் அலகைவிட்டு
வந்த நண்டைக் கொத்தும்!
வளையில் நண்டு வாயைக்கெளவ
வாத்தி ரைந்து கத்தும்! 2

தாங்கல் நீரில் மூழ்கியுடல்
தலையைத் தூய்மை செய்யும்!
தரையில் வந்தே அந்திநேரம்
மாலை வெய்யில் காயும்! 3

மூங்கில் தட்டி முளையடித்து
வாத்தை மூடி வைப்பார்!
முட்டை இடும்; முட்டையெலாம்
மூதூர் கொண்டே விற்பார்!






## 37

தடியை ஊன்றி நடப்பார்;
தாடை ஒட்டிக் கிடப்பார்;
உடல் இளைத்து நரைத்தே
சொள் ஒழுகச் சிரிப்பார்; 1

இருமிக் கொண்டே இருப்பார்;
என்னை அம்மாள் அடித்தால்
அருகில் வந்து தடுப்பார்;
அணைத்து முத்தம் கொடுப்பார்; 2

பாட்டுச் சொல்லிக் கொடுப்பார்;
பாடம் சொல்லிக் கொடுப்பார்;
வீட்டில் என்றன் உள்ளம்
விரும்பும் நல்ல தாத்தா! 3




## 38

பாக்கி டிப்பாள் பாட்டி!
பாய்மேல் காலை நீட்டி,
கையும் தலையும் ஆட்டி— 1

வெற்றிலை பாக்கை எடுப்பாள்;
சுண்ணாம்பு வைத்தும் மடிப்பாள்;
மெல்லக் கல்லால் இடிப்பாள்! 2

இடித்த வெற்றிலை எடுப்பாள்;
இட்டு வாயில் களிப்பாள்;
எச்சில் துப்பித் துடைப்பாள்! 3

பல்லில் லாத வாயும்
பாக்கு வெற்றிலை மேயும்!
கல்லின் இடிப்பும் ஓயும்! 4

# பாட்டி – II

## 39

பாட்டி பாப்பா ஆனாள்!
பாட்டி பாப்பா ஆனாள்!

நீட்டி விட்ட காலால்,
நில்லா தாடும் தலையால்,
கோட்ட மான முதுகால்,
குழறிப் பேசும் பேச்சால்— பாட்டி

சொள்ளை ஒழுக விட்டுச்
சோம்பித் தூங்கி விழுந்து,
பிள்ளை போலத் தன்னுள்
ஏதோ பிதற்றிக் கொண்டு— பாட்டி

பழுத்த பாட்டி கண்டு
பரிக சிக்க வேண்டாம்;
பழுத்த ஓலை எல்லாம்
பச்சை ஓலை பாப்பா!— பாட்டி




## 40

தம்பிப் பையன் சிறுபையன்!
தாமரை மலரைப் போற்கையன்!
தம்பிப் பையன் சிறுபையன்!
தங்கக் கட்டி போல்மெய்யன்! 1

கண்மலர் காட்டி அழைத்திடுவான்!
கைம்மலர் நீட்டி அழைத்திடுவான்!
உண்ணும் போழ்து முதுகேறி
உலுக்கிக் குலுக்கி ஆட்டிடுவான்! 2

கோலை எடுத்தே அடித்திடுவான்!
கோழி விரட்டிச் சிரித்திடுவான்!
நூலை எடுத்துக் கிழித்திடுவான்!
நுனிப்புல் காட்டிப் பழித்திடுவான்! 3

அக்காள் சடையைப் பிடித்திழுப்பான்!
அம்மா உடையைக் கடித்திழுப்பான்!
சொக்காய் போட்டு நடைகாட்டித்
துள்ளித் துள்ளிக் குதித்திடுவான்! 4

*வாயில் ஓடிக் கதவடைப்பான்!*
*வந்தால் ஓடி வழிமறிப்பான்!*
*பாயில் படுத்துக் கால்தூக்கிப்*
*பாட்டி அணைத்துப் படுத்திருப்பான்!*





## 41

ஓணான் போலத் தலைதூக்கி
உடலை நெளித்துப் பார்த்திடுவான்;
ஆணோ, பெண்ணோ வரக்கண்டால்
கை,கால் தூக்கி அழுதிடுவான்! 1

மண்ணைச் சுவரிற் பெயர்த்திடுவான்;
வாயில் வைத்துக் குதப்பிடுவான்;
கண்ணிற் கண்ட பொருளெல்லாம்
தாவித் தாவிப் பிடித்திடுவான்! 2

தஞ்சா வூர்ச்சிறு பொம்மைபோல்
தலையை, உடலை ஆட்டிடுவான்;
பஞ்சு போன்ற செங்கையால்
பாயைத், தரையை அடித்திடுவான்! 3

நாயைக் கண்டால் நகர்ந்திடுவான்;
சோற்றைக் கண்டால் நகர்ந்திடுவான்;
தாயைக் கண்டாற் சிரித்திடுவான்;
தலையை ஆட்டி அழைத்திடுவான் 4

கட்டை விரலைச் சுவைத்திடுவான்;
காலைத் தூக்கி உதைத்திடுவான்;
பிட்டு மாவைப் பிசைவார்போல்
மண்ணை வாரிப் பிசைந்திடுவான்! 5




## 42

நெற்றியிற் பட்டை நாமம்;
நெடுந்தோளிற் கயிற்றாற் கோத்த
விற்புரு வத்தார்க் கேற்ற
விதவித வளையல்; சால்வை;
சுற்றிலும் காதை மூடும்
பாகையோ கிழிந்த சோமன்;
மற்றொரு தோளில் தொங்கும்
வளை,மஞ்சள் நிறைந்த பெட்டி!

வழியெலாம் வளையற் காரர்,
'வளையலோ வளையல்!' என்பார்!
விழியினாற் குளிர்மை காட்டி,
'இந்தாங்கோ!' எனவி ளித்துப்,
பழகிய மக்கள் போலப்
பக்கத்தில் வந்து குந்திக்
குழிவிழுங் கன்னப் பெண்கள்,
'விலையென்ன ? கூ'றென் பார்கள்! 2

கைவளை வளையற் காரர்
எடுத்திடக் களிப்பார் பெண்கள்;
கைவழி வளையை மாட்ட,
உடலெலாம் நெளித்துக் காட்டி,
மைவிழி நீரைச் சொட்ட
வருந்துவார்; வளைய லெல்லாம்
கையினில் நுழைத்த பின்னர்
அவர்காட்டும் களிப்பைப் பாரீர்! 3






## 43

தட்டார்; இவர் தட்டார்!—நாளும்
தட்டா விட்டாற் கெட்டார்!

பொட்டுச் செய்து கொடுப்பார்;—இடை
போடும் நாணல் கொடுப்பார்;
தட்டு முட்டுச் சாமான்—வெள்ளித்
தடியும் செய்து கொடுப்பார்!

காது குத்த வருவார்;—பெண்கள்
காலுக் கணியும் தருவார்;
மாதர் நெற்றிச் சுட்டி—தோள்
வளையம் செய்தும் தருவார்!

ஓவியரைப் போன்றார்;—கல்லை
உடைக்கும் சிற்பி போன்றார்;
பாவி யற்றி வாழும்—ஏழைப்
பாவலரைப் போன்றார்!

குற்றஞ் சொல்லு கின்றார்;—'அவர்
சூது செய்வா' ரென்று!
குற்ற மற்றார் யாரே—என்று
கூற உம்மால் ஆமோ?





## 44

கசங்குக் கற்றை தலைய ழுத்தும்;
கையில் மொந்தை இருக்கும்;
கொசுவம் தொங்கும்; குனிந்த கத்திப்
பிடியும் எட்டிப் பார்க்கும்!

கூடை முறமும் கட்டிக், கூழை
வாங்கிக் குடித்துப் பிழைப்பாள்;
காடு மேடு சுற்றி, ஈச்சன்
கசங்கை வெட்டிச் சேர்ப்பாள்! 2

முறத்தின் முதுகில் அகணிப் பட்டை
கோத்துக் கோத்து இழுப்பாள்;
உறவுத் தாலி மெலிந்த கழுத்தில்;
உடலில் நரம்புப் புடைப்பே! 3

மாலை கண்ட மலரைப் போல
வாடி வதங்கிச் சோர்ந்து,
காலை நீட்டி, முதுகைத் தாழ்த்திக்
கசங்கை வெட்டிப் பிளப்பாள்! 4

மூக்கு வடியும் பிள்ளை வளைந்த
முதுகில் தூங்கி விழிக்கும்;
நாக்கை நீட்டித் தலையை யாட்டிப்
பசிக்குக் கூழைக் கேட்கும்! 5

கொடுத்த கூலி வாங்கிக் கொண்டு
பழையது கொஞ்சம் கேட்பாள்!
எடுத்துவரக் கண்கள் காட்டும் ஒளியை
என்ன என்று சொல்வேன்! 6

மொந்தைக் கூழை எடுத்துப் பார்ப்பாள்;
குழந்தைக்குக் கொஞ்சம் கொடுப்பாள்;
சிந்திச் சிந்திக் குடிக்கக் கண்டு
சிரித்து முத்தம் கொடுப்பாள்! 7

அகணிப் பட்டை, கசங்குக் கற்றை,
உகரம் போன்ற அரிவாள்,
முகம்வெ ளுத்த குழந்தை, மூளி
மொந்தை யவள் சொத்தே! 8



# முன்னோர்



## 45

அன்னை தந்தை உன்முன்னோர்!
அவர்க்கு முன்னோர் தாய்தந்தை!
தென்னா டளித்த மூதாதையரே
செந்தமிழ் நாட்டு முன்னோர்கள்! 1

கல்வி கேள்வி வல்லோர்கள்;
கடமை தவறா நல்லோர்கள்;
செல்வம் தேடி ஈந்தோர்கள்;
செழுமை யோடு வாழ்ந்தோர்கள்! 2

அறத்தின் வழியே நின்றோர்கள்;
அல்லவை யாவும் கொன்றோர்கள்;
மறத்தின் எல்லையைக் கண்டோர்கள்;
மறிகடல் வெற்றி கொண்டோர்கள்! 3

வயலைத் திருத்தி விளைத்தோர்கள்;
மலைபடு மணியை அளித்தோர்கள்;
கயல்விற் புலியைப் பொறித்தோர்கள்;
கனக விசயரை நெரித்தோர்கள்! 4

அரசை அமைச்சைப் படைத்தோர்கள்;
அடங்கார் மண்டை உடைத்தோர்கள்;
முரசு மூன்றும் உடையோர்கள்;
மூர்க்கப் புலியின் நடையோர்கள்!

கோட்டை கொத்தளம் அமைத்தோர்கள்;
குளிர்பூஞ் சோலை அமைத்தோர்கள்;
நாட்டுக் குயிரைக் கொடுத்தோர்கள்;
நல்லார் இணக்கம் அடுத்தோர்கள்!

மானம் உயிராய் மதித்தோர்கள்;
வாழும் வகையை விதித்தோர்கள்;
ஈனம் கண்டு கொதித்தோர்கள்;
எதிர்த்த பகையை மிதித்தோர்கள்!

காதல் வீரம் வளர்த்தோர்கள்;
காவியம் அளவிலா தளித்தோர்கள்;
சாதல் வரினும் தன்மானத்
தகைமை பேணிக் களித்தோர்கள்!






## 46

தலைசீவிப் பள்ளிக்கே ஓடு!—நல்
தங்கப் பதுமையாம் தோழர்க ளோடு!
விலையில்லா மெய்ப்பொருள் கல்வி!—அதை
விரும்பிப் படித்தால் அறிவுண்டாம் செல்வி! 1

அழுக்கில்லா ஆடையே மேன்மை!—அதை
அணிவதா லல்லவோ உடற்குண்டாம் தூய்மை!
ஒழுங்கோடு நூல்களைத் தூக்கி—நில்லாது
ஓடி ஓடி பள்ளியை நோக்கி! 2

சின்னஞ் சிறுகுயில் போல—இசை
சிந்திச் சிரித்துச் செவ்விதழ் காட்டு!
பொன்னொத்த தோழர்க ளோடு—பள்ளி
போகும் வழியிலும் ஒற்றுமை காட்டு! 3

வழியிற் பெரியோரைக் கண்டால்—நல்
'வணக்கம்' எனச்சொல்லு! ஓரமாய்ச் செல்லு!
இழிந்தவர் கல்லாத மக்கள்!—என்ன
இருந்தாலும் கல்லாதார் வயல்வெளிப் புற்கள்! 4

வேளை கடந்து செல்லாதே!—பள்ளி
வெளியினில் அங்கிங்கு மாக நில்லாதே!
நாளைக் கடத்திடப் போமோ?—சென்ற
நாளும் திரும்பி வருதலும் ஆமோ? 5

தப்பாமல் கல்வியை ஓது!—கல்வி
தரும்புகழ்க் கீடிந்த உலகினில் ஏது?
மப்பில்லா வானம்போல் ஆகும்!—கல்வி
வளமில்லா வாழ்க்கையில் பயனற்றுப் போகும்! 6

கற்பிப்போர் கண்கொடுப் போரே!—அந்தக்
கணக்காயர் உரையினில் இருசெவி சேரே!
நற்பெயர் எடுத்திட வேண்டும்!—நாளும்
நன்றாகப் படித்துநீ முன்னேற வேண்டும்! 7

அன்போடு கணக்காயர் போற்று!—பள்ளி
அறிவுரை வாழ்க்கையின் இருளுக்கு மாற்று!
என்றென்றும் கற்றிட லாகும்!—அறிவு
இல்லாமை என்கின்ற சொல்லற்றுப் போகும்! 8

பள்ளியிற் சள்ளை பொல்லாதே!—உடன்
பயில்பவர் மீதுநீ கோளும் சொல்லாதே!
கள்ளத் தனத்தைக் கொள்ளாதே!—செல்லாக்
காசாவாய்! கற்காமல் நாளைத் தள்ளாதே! 9

கற்றுத் தெளிவதே மேன்மை!—கல்வி
கல்லாத மக்களால் வருவதே தீமை!
பெற்றவர் காதுக்குத் தேனாம்—பிள்ளை
பேச்சாளி, அறிவாளி என்பது தானாம்! 10






## 47

அறிவைப் பெருக்கும் கூடம்;
அன்பைப் பெருக்கும் கூடம்;
மறைவு நீக்கி உம்மை
மனிதன் ஆக்கும் கூடம்! 1

ஒழுக்கம் சேர்க்கும் கூடம்;
உணர்வைச் சேர்க்கும் கூடம்;
வழுவை நீக்கி உம்மை
வாழ வைக்கும் கூடம்! 2

கண்ணை அளிக்கும் கூடம்;
கருத்தைக் கொடுக்கும் கூடம்;
எண்ணம் தன்னில் தூய்மை
என்றும் சேர்க்கும் கூடம்! 3

கடமை காட்டும் கூடம்;
கைத்தொழில் பழக்கும் கூடம்;
மடமை போக்கி உம்மை
வாழ வைக்கும் கூடம்! 4

நாட்டுப் பற்றை ஊட்டும்;
நலிவை நெஞ்சில் ஓட்டும்;
ஏட்டுச் சுரை ஆகாமல்
ஏறாய் ஆக்கும் கூடம்!



# பள்ளிக்கூடம் - II

## 48

பள்ளிக் கூடம் போவோம்!—நாம்
பள்ளிக் கூடம் போவோம்!
துள்ளி ஓடி ஆடி—நாளைத்
தொலைத்தால் என்ன உண்டாம்? 1

உடலைத் தேய்த்துக் குளித்தே—வீட்டில்
உள்ள ஆடை உடுத்தே
பொடியோ டெண்ணெய் தோசை—அப்பம்
புசித்து நூலை எடுத்தே— 2

அடக்கத் தோடே செல்வோம்!—மணி
அடிக்கு முன்னே செல்வோம்!
இடக்கு வழியிற் செய்தால்—காண்போர்
ஏசிப் பழிப்பார்! வேண்டாம்! 3

தோழ ரோடு சேர்ந்தே—நூலைத்
துருவித் துருவி ஆய்ந்தே
ஆழ மாகக் கற்றே—நல்ல
அறிவை யடைய வேண்டும்!— 4

*கற்றுக் கொடுப்போர் மேலோர்!—அவர்*
*கருத்தை ஏற்று நடப்போம்!*
*கற்றுக் கொடுப்போர்க்(கு) அன்பை—என்றும்*
*காட்ட வேண்டும்! வேண்டும்!*






## 49

துள்ளிக் குதித்து வருகின்றார்
பள்ளிச் சிறுவர் சாலைக்கு;
கள்ளம் கபடம் அறியாதார்;
கவலை ஒன்றும் தெரியாதார்! 1

பேச்சைச் சிரிப்பைக் கேட்பீரே;
பின்புற மிருந்து பார்ப்பீரே;
கூச்சம் இன்றி அவர்எண்ணக்
கோட்டை நுழைந்து பார்ப்பீரே! 2

பாட்டம் ஆட்டம் பார்த்திடுவீர்;
பரிகசச் சொல்லைக் கேட்டிடுவீர்;
கூட்ட மாக அவர்களுக்குள்
செய்யும் குறும்பைக் கண்டிடுவீர்! 3

அடக்கம் ஒடுக்கம் கற்றிடுவோம்;
அன்புப் பெருக்கைக் கொண்டிடுவோம்;
துடுக்கை விட்டுச் சிறுவரைப்போல்
தூய எண்ணம் பெற்றிடுவோம்! 4




50

படிக்க வேண்டும் ஆண்பெண்!
படித்தால் உண்டாம் முக்கண்!
படிக்கச் சிறக்கும் வாழ்வு!
படியார் அடைவார் தாழ்வு! 1

வயலை விளைக்கப் படிப்பு
வேண்டும்! செந்நெல் முடிப்புப்
பெயலே இல்லாப் போதும்
பெருகச் செய்யும் படிப்பு! 2

சின்னச் சின்னத் தொழிலைச்
செழிக்கச் செய்யும் படிப்பு!
பொன்னை அளிக்கும் படிப்பு!
புகழை அளிக்கும் படிப்பு! 3

வீட்டைத் துலக்கப் படிப்பு!
வீரம் செழிக்கப் படிப்பு!
நாட்டைத் துலக்கப் படிப்பு!
நாளும் வேண்டும் படிப்பு! 4

இன்னே படிக்க வேண்டும்!
என்றும் படிக்க வேண்டும்! 5
உன்னை ஈன்ற நாட்டிற்(கு)
உழைக்கப் படிக்க வேண்டும்!

தொழிலைப் படிக்க வேண்டும்!
தொழில் துறையைப் படிக்க வேண்டும்! 6
அழிவே இல்லாக் கல்வி
ஆண்பெண் படிக்க வேண்டும்!






## 51

தாய்மொழியே தமிழ்மொழியாம்! கண்டாய்!—அதைத்
தட்டாமல் நீபடிப்பாய் நன்றாய்!
காய்நிலவின் இனிமை நனிஉண்டு!—நாளும்
கற்றுணரக் கட்டிக் கற்கண்டு! 1

செந்தமிழோ தீங்கருப்பஞ் சாறு!—பள்ளி
சென்றுகற்கப் பொன்னிவள ஆறு!
சொந்தமொழி தமிழ்மொழியைப் போல—உனக்(கு)
எந்தமொழி இனிமைதரும் கூறு? 2

கற்றவரே கண்ணுடையார் என்றும்!—கல்வி
கல்லாதார் புண்ணுடையார் இன்றும்!
உற்றபொருள் கல்வியல்லால் உண்டோ?—நாட்டில்
மற்றபொருள் நிலைத்திருப்ப துண்டோ? 3

கொடுக்கக் குறையாத பொருள்கல்வி!—என்றும் 4
கொள்ளக் குறையாத பொருள்கல்வி!
எடுக்கக் குறையாத பொருள்கல்வி!—மாற்றார்
எரிக்கக் குறையாத பொருள்கல்வி!

இளமையினில் கற்கை மிகநன்று!—அந்த 5
இளமையினைப் போக்கி வீணேநின்று
வளமிழந்த பேர்கள் பலருண்டு!—மூத்த
வயதினிலும் படித்தாற் பயனுண்டு!

படித்துணரார் விளையாட்டுப் பொம்மை!—ஏட்டுப் 6
படிப்பிலையேல் என்னுண்டாம் நன்மை?
அடுத்தடுத்து நீபடிக்க வேண்டும்!—நல்ல
அறிவுண்டாம் புகழ்உண்டாம் யாண்டும்!

கற்றபடி நீநடக்க வேண்டும்!—ஏட்டில் 7
கண்டகளை நீவிலக்க வேண்டும்!
பெற்றவர்கள் உனைக்கண்டு மகிழ்வார்!—வேறு
பிறநாட்டார் உனைக்கண்டு புகழ்வார்!

படித்தபயன் அறிவோடு வாழ்தல்!—அந்தப் 8
பண்பிலையேல் உனக்குண்டாம் தாழ்தல்!
படித்தவருக் கெந்நாடும் நாடே!—நன்னூல்
படியாதார்க் கெந்நாடும் காடே!

கல்வியினால் உலகம்முன் னேறும்!—இதைக் 9
காணும்பொருள் ஒவ்வொன்றும் கூறும்!
கல்வியினால் வாழ்வளிக்கக் கூடும்!—வான்
கதிர்நிலவைக் கைக்கொள்ளக் கூடும்!

கல்வியின்றேல் தொழில்சிறப்ப தில்லை!—எந்தக்
கவின்கலையும் நாடடைவ தில்லை!
செல்வமிது செல்வமிது தேடே!—என்றும்
செழித்திருக்கும் உனையீன்ற நாடே!






## 52

கட்டாயம் கல்வி! கட்டாயம் யார்க்கும்!
கட்டாயம் கல்வி! கட்டாயம் என்றும்!
பொட்டல் வெளிக்கு நிழலைப் போலப்
பூத்த மலர்க்கு மணத்தைப் போல— 1

நட்ட நிலத்து வரப்பைப் போல
நன்செய் புன்செய் மழையைப் போலக்
கட்டிய வீட்டுக்குக் கதவைப் போலக்
கைவி ளக்குக்கு நெய்யைப் போல— 2

கட்டை வண்டிக்(கு) ஆணியைப் போலக்
காளை மாட்டுக்குக் கயிற்றைப் போலப்
பெட்டி பேழைக்குச் சாவியைப் போலப்
பெரிய குளத்திற்குப் படியைப் போல— 3

விளைந்த தோப்புக்குக் காவல் போல
வெள்ள ஆற்றுக்குக் கரையைப் போல
வளர்ந்த கொடிக்குக் கொம்பைப் போல
மங்கை எழிற்கு விழியைப் போல— 4

உண்ணும் உணவுக்(கு) உப்பைப் போல
ஊரின் இருளுக்(கு) ஒளியைப் போல
பண்ணுக் கிசைந்த பாடல் போலப்
படிப்புக் கேற்ற ஒழுக்கம் போல— 5

உடலை மறைக்கும் ஆடை போல
உழைப்புக் கேற்ற விளைவு போலக்
கடலை நோக்கும் விளக்கைப் போலக்
கண்ணைக் காக்கும் இமையைப் போல— 6

வறுமை மாற்றப் புரட்சி போல
வாழ்வுக் கேற்ற வளப்பம் போலப்
பொறுமைக் கேற்ற புகழைப் போலப்
புலிக்கு வாய்த்த வலியைப் போல— 7

காலை தோன்றும் கதிரைப் போலக்
கடலில் தோன்றும் முத்தைப் போல
மாலை தோன்றும் மதியம் போல
வாழ்க்கைக் கேற்ற நெறியைப் போல— 8

ஊருக் கேற்ற ஆறு போல
உடலுக் கேற்ற உணவு போல
ஏரிக் கேற்ற மதகு போல
இளமைக் கேற்ற வளமை போல— 9

புண்ணுக் கேற்ற மருந்து போலப்
பொருளுக் கேற்ற கொடையைப் போலக்
கண்ணுக் கழகாம் கருணை போலக்
கதைக்கு மூலக் கருவைப் போல—






# 53

காலை மாலை உடற்பயிற்சி
கடுநோய் போக்கும் நல்முயற்சி!
காலை மாலை உடற்பயிற்சி!
கைகால் உடலுயிர் நல்வளர்ச்சி! 1

குந்தி எழுந்தாற் கால்கையும்,
குடரும், இடையும் வலிவெய்தும்!
பந்தை அடித்தால் துடைமார்பும்
பாறை போல் விரிவடையும்! 2

நிலவில் 'பாரி' அடிப்பதுவும்,
நீரில் 'ஓரி' அடிப்பதுவும்,
அலைகடல் மூழ்கிக் குளிப்பதுவும்
அறிவுடற் காக்கம் அளிப்பனவாம்! 3

கைகால் சோர ஆடுவதும்,
கடற்கரை மணலில் ஓடுவதும்,
மெய்யை வளைத்துப் பின்நிமிர்ந்தே
விறைத்து நடப்பதும் நன்மருந்தே! 4

சிலம்பக் கூடம் உண்டாக்கி
முன்னாள் செய்தார் உடற்பயிற்சி!
நலங்கொள் உடலே பெருஞ்செல்வம்!
நாளும் செய்வாய் உடற்பயிற்சி! 5




## 54

பள்ளி பயிலும் சிறுவர் நாளை
பாரை ஆளப் போறீர்!—தமிழ்
ஊரை ஆளப் போறீர்!
பள்ளிப் படிப்பு பாதி யானால்
பாரை எப்படி ஆள்வீர்?—தமிழ்
ஊரை எப்படி ஆள்வீர்? 1

கல்வி பயிலும் சிறுவர் நாளை
கடலைத் தாண்டப் போறீர்!—நீர்த்
திடலைத் தாண்டப் போறீர்!
கல்வி கற்றுத் தெளியா விட்டால்
கடலை எப்படி ஆள்வீர்?—நீர்த்
திடலை எப்படி ஆள்வீர்? 2

சாலை பயிலும் சிறுவர் நாளை
தண்டெ டுக்கப் போறீர்!—மறத்
தொண்ட ளிக்கப் போறீர்!
சாலைப் படிப்பைத் தட்டிக் கழித்தால்
தண்டெ டுக்கப் போமோ?—மறத்
தொண்ட ளிக்கப் போமோ? 3

மன்றம் பயிலும் சிறுவர் நாளை
வானம் ஆளப் போறீர்!—தமிழ்
வானம் ஆளப் போறீர்!
மன்றப் படிப்பின் வளங்கு றைந்தால்
வானம் ஆளப் போமோ?—தமிழ்
மானம் மீளப் போமோ? 4

அரங்கு பயிலும் சிறுவர் நாளை
ஆட்சி செய்யப் போறீர்!—தமிழ்
ஆட்சி செய்யப் போறீர்!
அரங்குக் கல்வி குறைந்தால் நாளை
ஆட்சி செய்யப் போமோ?—தமிழ்
மீட்சி செய்யப் போமோ? 5

திண்ணை பயிலும் சிறுவர் நாளை
மண்ணை ஆளப் போறீர்!—தமிழ்
மண்ணை ஆளப் போறீர்!
திண்ணைப் படிப்புச் சிறுத்து விட்டால்
மண்ணை ஆளப் போமோ?—தமிழ்
விண்ணை ஆளப் போமோ? 6

வீட்டிற் பயிலும் சிறுவர் நாளை
வெற்றி கொள்ளப் போறீர்!—பகை
வெற்றி கொள்ளப் போறீர்!
வீட்டுப் படிப்பு மிகக்கு றைத்தால்
வெற்றி கொள்வ தெப்போ?—பகை
சுற்றி உள்ள திப்போ! 7

அறையில் பயிலும் சிறுவர் நாளை
ஆக்கஞ் செய்யும் அறிஞர்!—தமிழுக்(கு)
ஊக்கஞ் செய்யும் அறிஞர்!
அறைப்ப டிப்பும் அறையில் நின்றால்
ஆக்கஞ் செய்வ தெப்போ?—தமிழுக்(கு)
ஊக்கஞ் செய்வ தெப்போ? 8

தொழில் பயிலும் சிறுவர் நாளை
தொழில் நிறைக்கப் போறீர்!—நாட்டின்
எழில் நிறைக்கப் போறீர்!
தொழிற் பயிற்சி துண்டு பட்டால்
துயர்து டைப்ப தெப்போ?—நாட்டின்
உயர்வ ளிப்ப தெப்போ? 9

கலை பயிலும் சிறுவர் நாளை
நிலை யுயர்த்தப் போறீர்!—நாட்டின்
நிலை யுயர்த்தப் போறீர்!
கலைப் பயிற்சி கருகி விட்டால்
நிலை யுயர்த்தல் எப்போ?—மக்கள்
தலை யுயர்த்தல் எப்போ? 10






## 55

சிரிக்க வேண்டும் பாப்பா!—நீ
சிணுங்கக் கூடாது!—படிக்கச்
சிணுங்கக் கூடாது!

விரித்து நூலைத் தூக்கிப் பிடித்து
விரைவில் வீட்டு வேலை முடித்து—

தலையைச் சீவி வாரி முடித்து,
தங்கச் சிலைபோல் பள்ளி அடுத்து,
விலையில் கல்வி கற்று முடித்து,
வீட்டுக் கடங்கி நடக்க வேண்டும்!—

பெற்றோர் சொல்லைக் கேட்க வேண்டும்!
பெரியோர் சொல்லைக் கேட்க வேண்டும்!
கற்றோர் உன்னைக் கண்டால் வாரிக்
கண்ணில் ஒற்றிக் கொள்ள வேண்டும்!—

# உனக்கொன்று

## 56

தம்பி! உனக்கொன்று சொல்வேன்;—நன்றாய்ச்
சாப்பிட்டு விளையாடி வலிவெய்திக் கொள்ளு!
தெம்பான உடற்கூட்டி னுள்ளே—போற்றும்
சிறப்பான அறிவுண்டு; சோம்பலைத் தள்ளு! 1

உன்மொழி தனித்தமிழ் ஆகும்!—அதை
உயர்த்திப் பிறமொழி நீக்கிடல் வேண்டும்!
உன்னாடு செந்தமிழ் நாடு!—அதை
உடன்பெற நாடோறும் ஆவன தேடு! 2

பஞ்சம் பசிப்பிணி போக்க,—மற்றும்
பலசாதி மதக்கேடு யாவையும் நீக்கக்
கொஞ்சமும் நீயஞ்ச வேண்டாம்!—இந்தக்
கொடுமைகள் அற்றாலே ஒற்றுமை உண்டாம்! 3

நாட்டிற் செழுமை குலுங்க,—மக்கள்
நல்லற மாண்பினில் நாளு மிலங்க
வீடெலாம் தொழில்செய வேண்டும்!—இதை
விளையாடும் போதெல்லாம் நீஎண்ண வேண்டும்! 4




## 57

*உன்றன் வேலை முதல்வேலை*
*உன்தாய் தந்தை சொற்கேட்டல்!*
*உன்றன் வேலை முதல்வேலை*
*உற்றார் ஊரார் நேசித்தல்!* 1

*உன்றன் வேலை முதல்வேலை*
*ஒளிகண் டெழுதல்; உடல்குளித்தல்!*
*உன்றன் வேலை முதல்வேலை*
*உணவுண் டெழுதல்; தலைவாரல்!* 2

*உன்றன் வேலை முதல்வேலை*
*தூய ஆடை உடுப்பதுவே!*
*உன்றன் வேலை முதல்வேலை*
*ஒழுங்காய் நூலை எடுப்பதுவே!* 3

உன்றன் வேலை முதல்வேலை
பள்ளிக்(கு) ஓடிப் படிப்பதுவே!
உன்றன் வேலை முதல்வேலை
கணக்கர் உரைசெவி மடுப்பதுவே! 4

உன்றன் வேலை முதல்வேலை
ஒப்பாய்க் கற்றுத் தெளிவதுவே!
உன்றன் வேலை முதல்வேலை
ஊருக் குழைத்து வாழ்வதுவே! 5

உன்றன் வேலை முதல்வேலை
ஒண்பொருள் தேட முனைவதுவே!
உன்றன் வேலை முதல்வேலை
ஒக்க உண்டு வாழ்வதுவே! 6

உன்றன் வேலை முதல்வேலை
அன்னை தந்தைக் குதவுவதே!
உன்றன் வேலை முதல்வேலை
உற்றார் ஊரார்த் தாங்குவதே! 7

உன்றன் வேலை முதல்வேலை
உண்மை ஒளிக்கா திருப்பதுவே!
உன்றன் வேலை முதல்வேலை
ஒழுக்கம் உயிராய் ஓம்புவதே! 8

உன்றன் வேலை முதல்வேலை
ஊரைத் திருத்த முயலுவதே!
உன்றன் வேலை முதல்வேலை
ஊரை வாழ வைப்பதுவே! 9

*உன்றன் வேலை முதல்வேலை*
*உன்தாய் மொழியைக் காப்பதுவே!*
*உன்றன் வேலை முதல்வேலை*
*உன்தாய் நாட்டைக் காப்பதுவே!*





# தொழிலைப் போற்று

## 58

தொழிலைப் போற்ற வேண்டும்!
தொழிலைப் போற்ற வேண்டும்!
தொழிலில் இழிவே இல்லை!
சோம்பி வாழ்ந்தால் தொல்லை! 1

ஏரைப் பூட்டி உழுதே
மழையில் லாமல் அழுதே
காரை விளைத்தல் யார்க்காம்?
கண்ணே! மணியே! ஊர்க்காம்! 2

கல்லை உடைத்து வைத்தே
கடைகால் சுவரும் எடுத்தே
இல்லம் சமைத்தல் யார்க்காம்?
எழிலோ வியமே! ஊர்க்காம்! 3

தட்டித் தட்டி அறுத்தே
சமனாய்ப் பலகை இழைத்தே
பெட்டி செய்தல் யார்க்காம்?
பிள்ளைக் கனியே! ஊர்க்காம்! 4

*ஆணி செய்தல் யார்க்காம்?*
*அணியும் செய்தல் யார்க்காம்?*
*கோணி நெய்தல் யார்க்காம்?*
*குத்து விளக்கே! ஊர்க்காம்!*





# பொய்யும் மெய்யும்

## 59

பொய்யும் சொல்லக் கூடாது!—தம்பி!
பொய்யும் சொல்லக் கூடாது!
மெய்யும் சொல்லக் கூடாது!—தம்பி!
மெய்யும் சொல்லக் கூடாது! 1

பொய்யும் மெய்யும் நன்மை தீமை
பொறுத்துக் கூற வேண்டும்!
வையம் சிறக்கும் வழியி துதான்!
மனத்தில் நிறுத்த வேண்டும்! 2

உயிரைக் காக்க அறிந்தும் பொய்யை
உரைத்தால் என்ன தப்பு?
உயர்வி ழந்தோம் என்று மெய்யை
உதறு வதோ செப்பு? 3

மெய்யும் பொய்யும் நெருப்புச் சட்டி!
விழிப்பு மிகவே வேண்டும்!
மெய்யும் பொய்யும் இல்லா விட்டால்
வெற்றி யேது யாண்டும்? 4




## 60

அண்டை வீட்டில் கிழவன்!
அவனும் நல்ல உழவன்!
ஒண்டி யாக வாழ்ந்தான்!
ஒருமகன் துணைக்கும் இருந்தான்! 1

படிக்கச் சொல்லிப் பார்த்தான்;
பள்ளிக் கழைத்துப் பார்த்தான்;
அடித்துக் கிள்ளிப் பார்த்தான்!
மகனும் அழுது தீர்த்தான்! 2

பையன் படிக்க வில்லை!
படிப்பில் விருப்பம் இல்லை!
வெய்யில் நிழல்போல் ஓடி
வீணாள் போக்கினான் ஆடி! 3

உழுத அலுப்புத் தானோ,
உண்ணா அலுப்புத் தானோ?
கிழவன் ஒருநாள் நோயில்
கிடந்தான் வீட்டுப் பாயில்! 4

மருத்துவர் காலை வந்தார்;
மருந்தை எழுதித் தந்தார்!
மருந்தை மகனும் கடையில்
வாங்கி வந்தான் விரைவில்! 5

அருந்தக் கொடுப்பது ஒன்றும்,
அறைத்துப் பூசுவ தொன்றும்
மருந்தின் மீதே எழுதி
இருப்பதை மகனும் அறியான்! 6

மருந்தைப் படிக்காப் பையன்
மாற்றிக் கொடுத்து விட்டான்!
அருந்திய மருந்து நஞ்சென்(று)
அறியான் எழுத்தை அறியான்! 7

கிழவன் கண்கள் பிதுங்க,
கிட்டியே பற்கள் நெருங்க
அழுது பையன் ஓடி
அழைத்தான் மருத்துவர் நாடி! 8

மருத்துவர் வந்து பார்த்தார்;
'மருந்தை எடு' எனக் கேட்டார்;
அருந்தும் மருந்தும் இருக்க
நிலைமை அறிந்து கொண்டார்! 9

மாற்று மருந்து கண்டார்!
மகனை நொந்து கொண்டார்!
ஏற்ற கல்வி இல்லை!
அதனால் என்றும் தொல்லை! 10

பையன் மீண்டும் படித்தான்;
பண்பை, அறிவை அடுத்தான்;
கைமேற் பயனைக் கண்டான்;
கண்ணைத் திறந்து கொண்டான்! 11






## 61

ஊரில் வெள்ளம் வந்ததே!—ஏரி
உடைப்பெ டுத்துக் கொண்டதே!
ஊரில் உள்ள யாவுமே—வெருண்டு
ஓடி எங்கும் தாவுமே! 1

பெட்டி தூக்கி ஓடினர்;—பொருள்
கட்டித் தூக்கி ஓடினர்;
தட்டுத் தூக்கி ஓடினர்;—வெள்ளித்
தவலை தூக்கி ஓடினர்! 2

ஊரை விட்டே ஏகினர்;—தத்தம்
உடைமை கொண்டு போயினர்!
ஊரில் ஒருவன் மட்டுமே—தன்
உடைமை யாவும் விட்டுமே 3

தோளில் தாயைத் தந்தையைக்—கட்டித்
தூக்கி வந்த விந்தையை
ஆளும் அமைச்சன் கண்டான்;—அவன்
அருகில் வந்து நின்றான்! 4

'பழுத்த கிழங்கள் தூக்கியே—வெள்ளப்
பாழைத் தாண்டும் சிறுவனே!
கொழுத்த செல்வம் இருக்கையில்—குற்
றுயர்எதற் கோதான்?' என்றனன். 5

'பெற்ற அன்னை தந்தையே—என்றும்
பேசும் செல்வம் ஆகுமே!
மற்ற செல்வம் யாவுமே—நாட்டில்
வந்து வந்து போகுமே!' 6

என்று சிறுவன் கூறினான்!—எதிர்
இருந்த வன்முகம் மாறினான்!
என்றும் அன்னை தந்தையே—ஈடு
இல்லாச் செல்வம் ஆகுமே! 7






## 62

தலையைச் சீவிப் பொட்டிட்டுச்
சட்டை போட்டு மையிட்டுப்
பலகை புத்தகம் பைகொடுத்துப்
பள்ளிக் கனுப்புவாள் தாயாரும்! 1

'கண்ணே! மணியே! வழியினிலே
கால்வாய் உண்டே! பாலமுண்டே;
விண்ணின் நிலவே! பாலத்தின்
மேலே ஏறிப் பார்க்காதே!' 2

என்றே அடிக்கடி தாய்சொல்வாள்;
ஏகும் முன்பும் அதேசொல்வாள்!
நின்று பார்க்கும் சிறுபிள்ளை
தாயின் சொல்லை நினைக்காமல்! 3

*பாலத் தேறி நின்றொருநாள்*
*பார்த்தது பிள்ளை வாய்க்காலை!*
*கோல வானைத் தன்காலைக்*
*குளிர்நீர் வாய்க்கால் கண்டதுவே!* 4

*தாய்சொல் தட்டி மற்றொருநாள்*
*தாவி ஏறிப் பாலத்தில்*
*வாயில், மோதிக் கீழ்நோக்கி*
*வாய்க்கால் இடையில் வீழ்ந்ததுவே!* 5

*'அன்னை சொல்லைக் கேள்' என்றும்!*
*அதிலே நன்மை உண்டென்றும்!*
*அன்னை சொல்லே பொன்சொல்லாம்!*
*அமிழ்தம் அமிழ்தம் தேன்சொல்லாம்!* 6






## 63

காலும் கையும் சுருங்கிக்
கண்ணின் ஒளியும் ஒடுங்கித்
தோலும் நரம்பு மாகத்
தோன்றி வாழ்ந்தாள் கிழவி! 1

கிழவிப் பிள்ளை அழகன்
திருமண மான குமரன்!
பழகும் மனைவி பேச்சால்
தாயைப் பழித்து வந்தான்! 2

வீட்டை விட்டுத் தள்ளி,
வெறுத்துப் பேசி எள்ளி
மாட்டுக் கொட்டில் விட்டான்;
மல்லையில் சோறும் இட்டான்! 3

வழக்கம் போல ஒருநாள்
மல்லை கொட்டில் இல்லை!
அழகன் மல்லை தேடி
அலைந்தான் அங்கிங்(கு) ஓடி! 4

மகனும் மல்லை எடுத்தே
மறைத்து வைக்கக் கண்டாள்;
மகனைக் கூவி, "ஏண்டா,
மறைத்தாய் மல்லை?" என்றாள்! 5

"சிகைவெ ளுத்து நானும்
கிழவ னாகும் போழ்தில்
அகப்ப டாதே மல்லை!
அதனால் மறைத்தேன்!" என்றான்! 6






## 64

தந்தையும் தாயும் இறக்க, இருவரும்
தனித்தனி உலைவைத்தார்;
முந்தையர் சொத்தாம் நன்செய் வயல்வெளி
முறையே பகிர்ந்து கொண்டார்! 1

அண்ணன் திருமணம் ஆனவன்; பிள்ளை
ஆறுக்கு மேலுடையான்!
மண்ணை உழுவான்; விதைப்பான்; அறுப்பான்!
வயிற்றுக்குப் போதாதே! 2

இருவரும் ஒருமுறை உழுதார்; விதைத்தார்;
எருவிட்டே வளர்த்தார்!
பருவம் வந்தது! வயலும் விளைந்தது!
பங்கை அறுத்துவந்தார்! 3

களத்திற் கட்டை அடுக்கியே வைத்தார்;
காத்தார் இரவினிலே!
உளத்தில் அண்ணன் நினைத்தான் தம்பிக்(கு)
உதவி செய்வதென்றே! 4

'மறைவாய் இரவில் வயல்நெற் கட்டை
வைத்தால், அவன்கட்டில்
நிறையும் நெல்லும்; பொருளும் நிறையும்;
திருமணம் நிறைவேறும்!' 5

என்று நினைத்தே காலம் நோக்கி
இருந்தான் அண்ணனுமே!
சென்றன இருநாள்! நிலவும் சென்றது!
செயற்பட முடிவுகொண்டான்! 6

'அண்ணன் குடும்பம் பெரியது; பிள்ளை
ஆறுக்கும் மேலுண்டாம்!
மண்ணில் ஒருவன் நான்;என் கட்டை
மறைவாய் அவன்கட்டில் 7

வைப்பேன்; அறியான்; நெற்பொதி வளரும்;
வாழ்க்கை வளம்வளரும்;
இப்பொழு திரவே செய்வேன்' என்றான்;
எழுந்தான் தம்பியுமே! 8

வழியில் இருவரும் வந்தனர் தனித்தனி
வாய்க்கால் வழியாக!
இழியும் போழ்து கட்டோடு கட்டும்
இடிக்கச் சிரித்தனரே! 9




## 65

பகைவர் நாட்டுப் பட்டாளம்
படர்ந்தது சிற்றூர் வட்டாரம்!
பகைவர் எதிர்க்க உள்ளூரார்
பதுங்கி இருந்தார் மலையுள்ளே! 1

இந்தச் செய்தி சிற்றூரில்
இருந்த சிறுமி நன்கறிவாள்;
வந்து வந்து பட்டாள
வகையைச் சொல்லிப் போய்விடுவாள்! 2

வந்து திரும்பும் வழியினிலே
வளைத்தார் சிறுமியைப் பகைநாட்டார்!
'எந்த இடத்தில் உள்ளூரார்
மறைந்தார்? இடத்தைக் காட்'டென்றார்! 3

தந்தை நாட்டைத், தாய்நாட்டைத்,
தன்னை ஈன்ற பொன்னாட்டைச்
சிந்தை எண்ணி வணங்கியே,
'தெரியா' தென்றாள் சிணுங்கியே! 4

சொல்லச் சொல்லி அடித்தார்கள்!
தூக்கிற் போட்டே உதைத்தார்கள்!
சொல்ல வில்லை சிறுமியும்!
சுட்டுத் தள்ளி விட்டார்கள்! 5

சிறுமி உயிரைக் கொடுத்தாளே!
தேயாப் புகழை எடுத்தாளே!
உறுமும் பகைமுன் தாய்நாட்டை
உயிரைக் கொடுத்தும் காப்போமே!






66

மூவர் சேர்ந்து பள்ளிக்கே
முணுமு ணுத்து நடந்தார்கள்;
மூவரும் வழியில் நின்றார்கள்;
மட்டம் போட முயன்றார்கள்! 1

பெரிய மரத்து நிழலிலே
பேசிச் சிரிக்கும் வேளையிலே
கரியால் இழுத்த கோட்டைப்போல்
கட்டை எறும்புகள் சென்றனவே! 2

'எங்கே ஊர்ந்து போகின்றீர்?
இருங்கள்; எம்மோ டாடிடலாம்!
தங்கிப் பேசி மகிழ்ந்திடலாம்!
சற்றே இருங்கள்!' என்றார்கள். 3

‘நாங்கள் உணவைச் சேர்க்கின்றோம்!
நாளைக் குணவை யார்கொடுப்பார்?
போங்கள்! போங்கள்! உம்போலப்
பொழுதைப் போக்கின் என்உண்டாம்? 4

‘வெறுநாள் போக்கல் அறிவின்மை!
வேலையை முடித்த லேநன்மை!
வெறுநாள் போக்கோம்’ எனக்கூறி
விரைந்தன எறும்புகள் மரமேறி! 5

வெட்கம் அடைந்தனர் மூவருமே!
‘வீண்நாள் போக்கோம்!’ எனக்கூறிப்
பக்கம் இருக்கும் பள்ளிக்கே
பறந்தனர்! அறிவும் நிறைந்தனரே! 6






## 67

கோழி வளர்க்கவே எண்ணி—வீட்டின்
கோடியில் கூண்டொன்று கட்டினாள் பொன்னி!
கோழியும் வாங்கி வளர்த்தாள்;—கன்னிக்
கோழியும் சேவலும் கூண்டி லடைத்தாள்! 1

முட்டையும் இட்டது பெட்டை!—அந்த
முட்டையைத் திருடிற்று வீட்டுநாய் நெட்டை!
'முட்டை இடவில்லை' என்றே—பொன்னி
முகம்சோர்ந்தாள் கூண்டோரம் அடிக்கடி நின்றே! 2

எங்கோ புதரினில் கோழி—முட்டை
இடுவதாய் எண்ணினாள் இரண்டொரு நாழி!
இங்கே இடுவதற் கேற்ற—வகை
ஏதென எண்ணினாள்; வழிகண்டாள் பொன்னி! 3

பீங்கானில் முட்டைபோல் ஒன்று—பொன்னி
பிற்பகல் வாங்கினாள் கடையினில் சென்று!
வாங்கிய முட்டையைப் பொன்னி—கூண்டில்
வைத்தாளே கோழியும் வந்திட எண்ணி! 4

முட்டைஎன் றெண்ணியே நாயும்—அதை
முன்போலத் திருடி வாய்கௌவிப் போயும்
குட்டையின் ஓரத்தில் குந்தி—வாலைக்
குழைத்துக் கடிக்க உடைந்தது பல்லும்! 5

திருட்டுத் தொழில் என்றும் வேண்டாம்!—பிறர்
பொருளினைத் திருடினால் இழிவென்றும் உண்டாம்!
திருட்டுத் தொழில்கெட்ட தாமே!—சிறு
திருட்டிலும் கால்கைபல் உடைபட்டுப் போமே! 6






## 68

மொந்தைத் தயிரை எடுத்தே,
முட்டையும் பெட்டையும் எடுத்தே
சந்தையில் கொண்டு விற்கப் போனாள்
தன்னை வளர்த்த அன்னை! 1

பத்து மணிக்கு வீட்டின்
பக்கம் இருக்கும் கூட்டில்
புத்தம் புதிய முட்டை யொன்று
பொன்னி இருக்கக் கண்டாள்! 2

குனிந்து முட்டை எடுத்தாள்;
'கோழியிங் கேதெ'ன நினைத்தாள்;
'முனியன் வீட்டுக் கோழி இட்ட
முட்டை' எனமுணு முணுத்தாள்! 3

முனியன் வீட்டை அடுத்தாள்;
முட்டையைக் கொண்டு கொடுத்தாள்!
முனியன் அன்னை பொன்னியை வாழ்த்தி
முத்தப் பரிசு கொடுத்தாள்! 4




## 69

கதைசொல் லட்டுமா? தம்பி!—நல்ல
கதைசொல் லட்டுமா? தம்பி!

பதைத்துத் துடித்தே அருகில் வந்து
பார்க்காமல் எங்கோ பார்க்கிறாய் தம்பி!—

காதை இப்படித் திருப்பு!—தம்பி!
கண்ணை இப்படித் திருப்பு!
பாதிக் கதையைத் தொடங்கு முன்னே
பறந்தால் எப்படி நடக்கும்?

கதையைச் சொன்னால், 'ஊம்ஊம்' கூட்டிக்
கதையைத் தூண்ட வேண்டும்!
புதிய புதிய கேள்வி கேட்டுப்
புத்தி கற்க வேண்டும்!

கோணி நாணிக் குந்தி யிருந்தால்
கூறு வதுநான் எப்படி?
ஆணிப் பொன்னே! அருகில் வந்தே
அமர்ந்து கேள்நீ இப்படி!

தாழ்ந்த தலையை நிமிர்த்திப் பார்த்துத்
தம்பி! கதையைக் கேளு;
வாழ்ந்து வந்ததாம் ஒருநரி—தம்பி!
அத்தோடே கதை சரி!






## 70

*தமிழுங்கள் மொழியே!—அதை*
*தமிழுங்கள் விழியே!*
*தமிழுங்கள் உயிரே!—உயர்*
*தமிழுங்கள் பயிரே!* *1*

*தமிழ்வானப் பரிதி!—இசை*
*தருமின்பச் சுருதி!*
*தமிழும்மை ஈன்றாள்!—அவள்*
*அமிழ்தினைப் போன்றாள்!* *2*

*தமிழ்நறுங் காற்று!—பிறர்*
*தரும்மொழி கூற்று!*
*தமிழுங்கள் சோலை—தன்னில்*
*தழைத்திட்ட மாலை!* *3*

தமிழ்காப்போர் வாழ்வார்!—தனித்
தமிழ்சாய்ப்போர் வீழ்வார்! 4
தமிழின்பம் சேர்க்கும்!—தூய
தமிழ்துன்பம் போக்கும்!






## 71

அன்னாய் வாழ்க! அன்னாய் வாழ்க!
அன்னைக் கொளிதரும் அன்பே! வாழ்க!
தென்னாட் டவரின் திருவே! வாழ்க!
செந்தமிழ் மொழியே! உயிரே! வாழ்க! 1

உலகுக் கொளிதரு விளக்கே! வாழ்க!
உயிருக் கினிமை ஒலியே! வாழ்க!
பலகலை நுணுக்கப் பைந்தமிழ்! வாழ்க!
பல்சுவை அமுதே! தேனே! வாழ்க! 2

அன்பை அறத்தை அகத்தை வகுத்தாய்!
அழியாக் கன்னித் தமிழே! வாழி!
இன்பப் புறமும் இயலிசை கூத்தும்
ஈன்றாய்; எம்மை ஈன்றாய்! வாழி! 3

மொழியே! தமிழர் விழியே! வாழி!
முக்கனி வாழி! சர்க்கரை வாழி!
வழியும் தேனடைப் பிழிவே! வாழி!
மணமலர்ச் சோலைக் குளிரே! வாழி! 4

மங்கா ஒளியே! மலையிளங் காற்றே!
திங்கட் குழவி! செவ்வாய்க் குயிலே!
பொங்கல் அமுதே! புதுத்தைப் பூவே! 5
சிங்கத் தமிழர் தீந்தமிழ் வாழி!

கன்னடம் தெலுங்கு கவின்மலை யாளம்
உன்னிடம் பிறந்த துணர்ந்தேன்! வாழி!
தென்னிடம் சிறக்க வளர்ந்தோய்! வாழி! 6
செந்தமிழ் கொடுந்தமிழ் தந்தோய்! வாழி!

இத்தரைத் தமிழர்க் கேற்றம் சேர்த்த
எழிலே! மலையிடைப் பொழிலே! வாழி!
தித்திக்கும் தேனே! முத்தமிழ் அன்னாய்! 7
திரைகடல் தாண்டியும் பறந்ததுன் புகழ்க்கொடி!

வடக்கை வென்றாய்! மலைகடல் வென்றாய்!
பணிமுடி நெரித்தது கணக்கிடப் போமோ?
கிடக்கும் குமரிக் கீழ்நா டெங்கும் 8
அடக்கி ஆண்ட அரசே! வாழி!

முடிபுனை வேந்தர் மூவர் தம்மின்
மடியில் வளர்ந்த வரிக்குயில்! வாழி!
அடிமுடி காணா வான்கடல்! வாழி! 9
அன்னாய் தமிழே அன்னாய்! வாழி!

முன்னூல் பன்னூல் தந்தாய்! வாழி!
முத்தே! பவழக் கொத்தே! வாழி!
இந்நாள் பன்னாள் எந்நா ளுக்கும்
கன்னி கழியாக் கருவே வாழி!






## 72

தமிழன் என்றும் மனம்குழையான்!
தமிழன் என்றும் அறம்பிழையான்! 1
தமிழன் எவர்க்கும் தவறிழையான்!
தமிழன் எவர்க்கும் தலைகுனியான்!

தமிழன் எவர்க்கும் வழிகாட்டி!
தமிழன் எவர்க்கும் உணவூட்டி! 2
தமிழன் பகைக்குக் கூர்ஈட்டி!
தமிழன் அன்பிற்(கு) அருள்காட்டி!

தமிழன் தோள்கள் மலைத்தோளே!
தமிழன் வாள்கள் கொலைவாளே! 3
தமிழன் நண்பர் வாழ்வாரே!
தமிழன் பகைவர் வீழ்வாரே!

தமிழன் கொடையே பால்ஏனம்!
தமிழன் பண்பே பூங்கானம்!
தமிழன் சிறப்பே முன்வானம்!
தமிழன் உயிரே தன்மானம்! 4

தமிழன் துயரில் கலங்கானே!
தமிழன் பிறர்பொருட்(டு) ஏங்கானே!
தமிழன் உழைப்பான்; தூங்கானே!
தமிழன் கொடுப்பான்; வாங்கானே! 5

தமிழன் அறியான் சிறுகள்ளம்!
தமிழன் கண்கள் அருள்வெள்ளம்!
தமிழன் உள்ளம் தனிஉள்ளம்!
தமிழன் மொழியே தேன்பள்ளம்! 6

தமிழன் பிறர்நல மழைகாற்று;
தனையேய்ப் பவர்க்கோ சுழற்காற்று!
தமிழன் மாற்றார்க்(கு) அனற்காற்று!
தமிழன் என்றும் குளிர்காற்று! 7

தமிழன் தெய்வம் தனித்தெய்வம்!
தமிழன் காதல் தனிக்காதல்!
தமிழன் வீரம் தனிவீரம்!
தமிழன் பண்பு தனிப்பண்பே! 8

தமிழச் சிறுவர் பொற்புடையோர்!
தமிழப் பெண்கள் கற்புடையோர்! 9
தமிழ மறவர் விற்புடையோர்!
தமிழ வேந்தர் வெற்புடையோர்!

தமிழன் இயலோ அறிவாக்கம்!
தமிழன் இசையோ தேன்தேக்கம்! 10
தமிழன் கூத்தோ நல்லூக்கம்!
தமிழன் இலக்கியம் பெருநோக்கம்!






—II

## 73

கண்ணெதிர் கண்டபல—இயற்கைக்
காட்சியின் தோற்றமெலாம்
மண்ணதில் தீட்டிவைத்தான்—தமிழன்
வண்ணக் கலவையதால்! 1

தெள்ளிய தெள்ளமுதாய்த்—தமிழைச்
சீருடன் செப்பனிட்டான்!
உள்ளங் கவர்கவிதை—அளித்தான்
உணர்வுப் பெருக்கதனால்! 2

கல்லை உயிர்ப்பித்தான்—தமிழன்
கற்பனை உச்சியெட்டி!
வில்லின் துணைவலியால்—உலகில்
வெற்றி முரசடித்தான்! 3

முன்னவர் காலமென்பார்—இவையெலாம்
முற்றும் அறியாதார்!
இன்னும் வலியுடையான்—தமிழன்
இமயமும் சாடுதற்கே! 4




74

உன்னரும் நாடு தமிழ்நாடே!
உலகிற் கெல்லாம் பழநாடே! 1
தென்னை செந்நெல் விளைநாடே!
தீஞ்சுவைக் கன்னல் நிறைநாடே!

தாயை ஈன்ற தமிழ்நாடே!
தம்பி உனது தாய்நாடே! 2
பாய்புலித் தந்தைப் பொன்னாடு!
பாட்டி பிறந்த தமிழ்நாடு!

முல்லை பூத்த மலர்க்காடும்,
முன்றில் இருண்ட உன்வீடும், 3
கொல்லை உழுத உன்மாடும்,
குளிர்ந்த நிழலும் தாய்நாடே!

ஆர்கடல் உலகப் பெருவிளக்காம்!
அன்னை நாடு தாய்நாடு! 4
கார்இருள் ஓட்டும் விண்விளக்காம்!
கடற்கரை ஓரச் சுழல்விளக்காம்!

வாழை கமுகு மலர்த்தோட்டம்!
வற்றா ஆற்றின் நீர்ஓட்டம்!
ஏழை மலையும் தேனாட்டம்!
எங்கும் என்றும் கார்ஆட்டம்! 5

குளத்துள் எருமை கற்குன்றம்!
குயிலின் பாட்டோ இசைமன்றம்!
களத்து மேடோ பொதுமன்றம்!
கழனி யோரம் பூமன்றம்! 6

கிழக்கு மேற்கு நீள்கடலும்,
தெற்குக் குமரிப் பெருங்கடலும்,
அழகில் வேங்கட வடத்திடலும்
அமைந்த நாடுன் உயிர்உடலும்! 7

மன்னர் வாழ்ந்த பொன்னாடே!
வழங்கி வாழ்ந்த நன்னாடே!
இன்னல் அறியாப் பெருநாடே!
இமயம் வென்ற துன்நாடே! 8

கற்றோர் வாழ்ந்த கலைநாடு!
கடாரம் வென்ற சிலைநாடு!
பொற்றோர் அளித்த பொன்னாடு!
புறம்அகம் கண்ட உன்நாடு! 9

வள்ளல் பிறந்தது உன்நாடு!
வரிசிலை கண்டது உன்நாடு!
அள்ளும் சிலம்பும் மேகலையும்
குறளும் அளித்த துன்நாடே! 10




## 75

வணக்கம் வணக்கம் வணக்கம் தாயே!
மலர்த்தேன் தமிழே! மருந்தே! வாழ்வே! 1
வணக்கம் வணக்கம் வணக்கம் தாயே!

குணகடல் வேங்கடம் குமரி மேற்கடல்
குரல்ஒலி தந்த உயிரே! தமிழே!
வணக்கம் வணக்கம் வணக்கம் தாயே!

அன்னை அறையை அகற்றி வந்தே
'அம்மா' என்றது தீந்தமிழ் மொழியாம்! 2
உன்னை வணங்குவன் வணங்குவன் தாயே!

பின்னர்த் 'தாத்தா', 'அத்தை' என்றே
பிதற்றிய சொல்லும் தீந்தமிழ் நன்றே
உன்னை வணங்குவன் வணங்குவன் தாயே!

கையினை ஊன்றிக் காலிரண் டிழுத்து
மைவிழி நீர்முகம் செவ்விதழ் கறுக்க
'ஐயா', 'அம்மா' என்றது தமிழாம்! 3

பொய்புனை மாற்றார் இன்றுள புலவர்
உய்யும் வழிசெய் ஒண்டமிழ்த் தாயே!
கையைக் கூப்பி வணங்குவன் வணங்குவன்!

தத்தி நடந்து தளிர்க்கை நீட்டி
'அக்கா' என்றதும் அழகுத் தமிழாம்!
பத்தரை மாற்றுப் பொன்னே! தமிழே!

இத்தரை மக்களும் இன்றும் உன்னை
இறைஞ்சி வணங்கிப் பயிலுதல் கண்டேன்!
சித்திரைத் தென்றலே! வணக்கம் வணக்கம்! 4

துள்ளித் திரியும் துடுக்கு நாட்களில்
புள்ளியிற் பயின்றது பைந்தமிழ் மொழியாம்!
உள்ளம் இனிக்கும் அமிழ்தே! தமிழே!

வள்ளலை வளர்த்தோய்! வரைபயன் நிறைத்தோய்!
எறிகடல் முத்தே! மணியே! வாழி!
உள்ளம் உருகி வணங்குவன் தாயே! 5

பூத்த சோலைப் பூவண் டோடு
புதரிடை ஆடி இசைத்ததும் தமிழாம்!
காய்த்த பலாவே! கரும்பே! தமிழே!

மேத்திசை கீழ்த்திசை விரிகடல் சூழ்ந்த
எத்திசை எங்கும் நடத்தினாய் அரசு!
வாழ்த்தி வணங்குவன் வணங்குவன் அம்மா! 6

அகமும் புறமும் உலகுக் களித்தாய்!
அணியாம் சிலம்பு குண்டலம் மேகலை
திகழ அணிந்தாய் திருவே! தமிழே!

பகைவர்க் கருளிப் பண்பினை வளர்த்தாய்!
தொகைதொகை யாக நூல்பல அளித்தாய்!
நகைமுகத் தமிழே! வணக்கம் வணக்கம்! 7

ஓடை அருவி உயர்மலைச் சாரல்
ஆடும் மூங்கில் அலைக்கும் காற்றும்
பாடும் குயிலும் பயிலுமுன் தேமொழி! 8

ஈடிலா மொழியே! ஈன்றாய் மொழியே!
இயலிசை கூத்தை அளித்தாய்! வாழி
கோடி வணக்கம் வணக்கம் தாயே!

பொன்னொளி வீசும் புதுவான் பரப்பும்
புதரிடை ஆடும் புட்கள் விளிப்பும்
என்னென் றுரைப்பேன்! என்னென் றுரைப்பேன்! 9

கன்னித் தமிழே! உன்னைப் போலக்
கண்செவி மூக்கு மெய்வாய்க் கென்றும்
மன்னிய இன்பம் வழங்கிய தில்லை!

தென்றல் இனிமை செழுநிலாக் குளிர்மை
செவ்விதழ்ச் சிறுவர் சிரிப்பின் வளமை
என்றும் தமிழ்மொழிக் கீடா கும்மோ? 10

மன்றில் இசைக்கும் யாழும் குழலும்
மத்தள முழக்கும் கைத்தாள ஒலியும்
என்றும் ஈடோ? ஈடோ? வணக்கம்!



# மதிப்புரைகள்

குழந்தைகளின் உள்ளத்தை அறிந்து நல்வழியில் அவ்வப்போது திருப்பிவிட்டால் நாட்டிலுள்ள பல பிரச்னைகள் மறையலாம். எனவே, சிறியவர்களுக்கு நல்ல பண்புகள் ஏற்படச் செய்வதே பெரியவர்களுக்குள்ள தலைமையான கடமை. சிறுவர்க்கு நல்ல எண்ணங்களும் பரந்த மனப்பான்மையும் உண்டாவதற்கு அன்னவர்க்கேற்ற புத்தகங்கள் வகை வகையாக வர வேண்டும். பாட்டுக்கள் குழந்தைகளின் உள்ளத்தை ஈர்க்கத்தக்க வகையில் அமைந்து விட்டால், சிறுவர்களின் உள்ளத்தில் அவை பதிந்து என்றென்றும் நிலைபெற்று நிற்பதுடன், அவர்களுடைய வாழ்க்கையை நேரிய போக்கில் கொண்டு செலுத்தும் சக்தியைப் பெற்றுவிடும். இதை உணர்ந்த சிலர் இக்காலத்தில் குழந்தைகளுக்கான நல்ல பாட்டுக்களை இயற்றிப் புத்தகமாக வெளியிட்டு வருகிறார்கள். இத்துறையில் வாணிதாசன் கைவரப்பெற்றிருக்கிறார் என்று துணிந்து கூறலாம்.

அன்னை சொல்லைக் கேள்என்றும்
அதிலே நன்மை உண்டென்றும்,
அன்னை சொல்லே பொன்சொல்லாம்
அமிழ்தம் அமிழ்தம் தேன்சொல்லாம்

என்று ‘தாய் சொல் கேள்’ என்பதில் கவிஞர் பாடியிருப்பது நன்றாக அமைந்திருக்கிறது.

மற்றும் விளையாட்டுக்கள், விலங்குகள், பறவைகள், கல்வி, தமிழ்நாடு, தமிழின் சிறப்புப் பற்றிய பாட்டுக்களும் பாராட்டத்தக்க வகையில் உள்ளன.

இந்நூல் குழந்தைகளுக்கான நல்ல இலக்கியம்

**தினமணி 2.10.'59**

